சந்திரா

# தமிழ் உரைநூல்

## மூன்றும் வகுப்பு

அரசினரின் மூன்றும் வகுப்புத் தமிழ்ப் பாட நூலில் உள்ள உரைநடைப் பாடங்களுக்கு அருஞ்சொற்பொருள், மொழிப் பயிற்சி, வினு-விடை, இலக்கணக் குறிப்பு, செய்யுள்களுக்குச் சொற்பொருள், கருத்துரை, வினு-விடை ஆகியவை அடங்கியுள்ளன.

18/1/69

ஆசிரியர் :
பு. செ. அல்லியரசி
ஆசிரியை, அர்ச். பிரான்சிஸ் சேவியர் உயர்நிலைத் துவக்கப்பள்ளி,
சென்னை–15.




சுதந்திரா பதிப்பகம்
பப்ளிஷர்ஸ் & புக்செல்லர்ஸ்
செவ்வாய்ப்பேட்டை : : சேலம்–2

 1969 [விலை : 50 காசுகள்

# பொருளடக்கம்

## உரைநடைப் பாடம்



## செய்யுட் பாடம்

# சந்திரா தமிழ் உரைநூல்

## மூன்றும் வகுப்பு

## 1. கடவுள் வணக்கம்

**வினு-விடை**

**1. ஆண்டவன் வடிவம் எது?**

அன்பு வடிவமே ஆண்டவன் வடிவம் ஆகும்.

**2. ஆசிரியர் ஆண்டவனை என்ன வேண்டுகிறுர்?**

வாழ்வில் இன்பம் வேண்டும், துன்பம் நீங்க வேண்டும், பகை நீங்க வேண்டும், நன்மை நிலைக்க வேண்டும் என்று ஆசிரியர் ஆண்டவனை வேண்டுகிறுர்.

## 2. வினுவும் விடையும்

**வினு-விடை**

**1. மாங்காய் எதற்கு உதவும்?**

மாங்காய் ஊறுகாய் போட உதவும்.

**2. நாம் ஏன் சாப்பிடுகிறேம்?**

உடம்பை வளர்க்க நாம் சோறு சாப்பிடுகிறேம்.

**3. வீட்டில் பிள்ளை என்ன செய்யும்?**

வீட்டில் பிள்ளை ஓடியும், இருந்தும், கொஞ்சியும், தவழ்ந்தும், புரண்டும் விளையாடும்.

**4. பாயில் எத்தனை வகை உண்டு?**

ஓலைப்பாய், ஈச்சம்பாய், கோரைப்பாய், தாழம்பாய், பிரப்பம்பாய் எனப் பலவகை உண்டு.

## 3. விடுகதை

**விடைகள்**

1. உப்பு 2. முட்டை 3. தேங்காய் 4. ஆகாயம் 5. சந்திரன் 6. விளக்கு 7. கதவு 8. ஆமணக்குக் காய் 9. தேன்கூடு 10. மாதுளம்பழம்.

### வேறு சில விடுகதைகள்

1. எங்கள் வீட்டுத் தோட்டத்தில் பச்சைப் பாம்பு ஊஞ்சலாடுகிறது—அது என்ன ?—**புடலங்காய்.**

2. கருப்புச் சட்டைக்காரன் காவலுக்குக் கெட்டிக் காரன்—இவன் யார் ?—**பூட்டு.**

3. கன்னங்கறுத்த பழம் கருநாவற் பழம் அன்று; சுற்றி வெளுத்திருக்கும் சுண்ணும்புக் கரண்டமன்று. காசு கொடுத்தாலும் வாங்கமுடியாத பழம்—இது என்ன பழம் ?—**கண்ணின் கருவிழி.**

4. பத்து விரல் பந்தாட, ஐந்து விரல் அமைந் திருக்க, சூரியனேடு சூதாட, எமனேடு வாதாட உள்ள பொருள்—இது என்ன பொருள் ?—**வறட்டி.**

5. அப்பன் சொரியன், ஆத்தாள் சடைச்சி, பிள்ளை சர்க்கரைக்கட்டி—இது என்ன ?—**பலாப்பழம்.**

### இலக்கணம்

**மனப்பாடம் செய்:** ஓர் எழுத்துத் தனியாக நின்ரு வது, பல எழுத்துக்கள் தொடர்ந்து நின்ருவது ஒரு **பொருளைத் தெரிவிப்பது சொல்** எனப்படும்.

கை, தா, தீ, தை, நீ, பை, போ, மா, மை, வா, வை—இவை தனித்தனியாக நின்று பொருள் தரும் ஓர் எழுத்துச் சொற்கள்.

பல், மூக்கு, உடம்பு, நல்லவன், படித்தவன்—இவை, பல எழுத்துக்கள் தொடர்ந்து நின்று பொருள் தரும் சொற்கள்.

## 4. எட்டாத பழம்

### அருஞ்சொற்பொருள்

இரை கிட்டாமையால் - தீனி கிடைக்காதபடியால்
அந்திநேரம் - மாலை
கௌவ - வாயால் பிடிக்க
சோர்ந்து - களைத்து
கூறி - சொல்லி

### வினு-விடை

**1. நரி ஏன் வருந்தியது ?**

ஒரு நாள் காட்டில் ஒரு நரிக்கு இரை கிடைக்கவில்லை. மாலை வரையில் அது பல இடங்களில் இரையைத் தேடித் திரிந்து வருந்தியது.

**2. நரி எதைக் கண்டது?**

நரி ஒரு திராட்சைத் தோட்டத்தைக் கண்டது.

**3. நரி விரும்பியது என்ன?**

தோட்டத்தில் ஒரு பந்தலில் திராட்சைக்கொடி படர்ந் திருந்தது. அதில் பழங்கள் கொத்துக் கொத்தாய்ப் பழுத்துத் தொங்கின. அப்பழங்களைத் தின்ன நரி விரும்பியது.

**4. நரி என்ன செய்தது?**

பழக்குலைகள் உயரத்தில் தொங்கின. ஆகையால் நரி குதித்துக் குதித்துப் பழத்தைக் கௌவ முயன்றது.

**5. நரி என்ன கூறியது?**

நரிக்குப் பழம் எட்டவில்லை. அது சோர்ந்துவிட்டது. தன் தோல்வியை ஒப்புக்கொள்ள அது விரும்பவில்லை. எனவே அது, "சீச்சீ! இந்தப் பழம் புளிக்கும். இதைத் தின்றால் பல் கூசும்," என்று கூறியது.

## 5. புதிய நிறுத்தல் அளவைகள்

### அருஞ்சொற்பொருள்

நிறுத்தல் - எடை போடுதல்
தராசு - எடைபோட உதவும் கருவி
சரிநிறை - சரியான எடை
வழங்குகிறோம் - சொல்லுகிறோம்.

### வினா-விடை

**1. புதிய எடைகளுள் சிறியது எது? பெரியது எது?**

புதிய எடைகளுள் சிறியது கிராம். பெரியது கிலோ கிராம்.

**2. எத்தனை கிராம் கொண்டது கிலோ கிராம்?**

ஆயிரம் கிராம் கொண்டது ஒரு கிலோ கிராம்.

**3. டெக்கா கிராம், ஹெக்டோ கிராம் என்பவற்றின் மதிப்புகள் யாவை?**

பத்துக் கிராம் கொண்டது ஒரு டெக்கா கிராம். பத்து டெக்கா கிராம் கொண்டது ஒரு ஹெக்டோ கிராம்.

**4. சரிநிறை என்பதை எப்படி அறிவது?**

தராசுக் கோலின் நடுவில் உள்ள முள் சாயாமல் நின்றால், எடையும் பொருளும் சரிநிறை என்பதை அறியலாம்.

**5. புதிய நிறுத்தல் அளவையை எப்படி வழங்குகிறோம்?**

புதிய நிறுத்தல் அளவையை நாம் 'கிராம்' என்னும் பெயரால் வழங்குகிறோம்.

## 6. தென்னை மரம்

### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| தாவரம் - பயிர், புல், பூண்டு, செடி, கொடி, மரங்கள் | வழுக்கை - இளந்தேங்காய் |
| கீற்று - பின்னப்பெற்ற ஓலை | சுண்டிய - வற்றிய |
| கூரைவேய - கூரைபோட | அகப்பை - கொட்டாங்கச்சியால் செய்யப்படும் கரண்டி |
| வேட்கை - தாகம் | ஆண்டு - வருடம் |
| தணிக்கும் - குறைக்கும் | பகுதி - பாகம் |

### வினா-விடை

**1. கோடு இட்ட இடத்தில் பொருத்தமான சொல்லை எழுது:**

(அ) நீர் சுண்டிய தேங்காயைக் கொப்பரை என்கிறோம்.

(ஆ) இளநீரில் வழுக்கை உண்டு.

**2. தென்னை மரத்தால் நமக்குப் பயன் என்ன?**

தென்னை மரத்தைப் பிளந்து வீடு கட்டலாம். சிறு ஓடைமீது பாலம் போடலாம். ஓலையைப் பின்னிக் கூரை போடலாம். இளநீர் குடிக்க உதவும். தேங்காய் தின்ன உதவும். கொப்பரையிலிருந்து தேங்காயெண்ணெய் பெறலாம். தேங்காய் நார் கயிறு திரிக்க உதவும். தேங்காய் ஓடு அகப்பை செய்ய உதவும்.

**3. தென்னையைப்போலப் பயன்படும் வேறு மரம் எது?**

தென்னையைப்போலப் பயன்படும் வேறு மரம் பனை மரம் ஆகும்.

## 7. நெற்பானையும் எலியும்

### வினா-விடை

**1. சுண்டெலி என்ன செய்தது?**

பாட்டி வீட்டுப் பழம்பானையில் ஓர் ஓட்டை இருந்தது. சுண்டெலி, அந்த ஓட்டை வழியே உள்ளே புகுந்து நெல்லைத் தின்றது.

**2. சுண்டெலி ஏன் வெளிவர முடியவில்லை?**

நெல்லைத் தின்று தின்று சுண்டெலியின் வயிறு ஊதிப் பருத்துவிட்டது. ஆதலால், பானையிலிருந்து சிறிய ஓட்டை வழியாக அதனால் வெளியே வர முடியவில்லை.

**3. கிழவி என்ன செய்தாள்?**

கிழவி காலையில் பானையைத் திறந்தாள்.

**4. பூனை என்ன செய்தது?**

அந்தக் கிழவியின் பக்கமாக வந்த ஒரு பூனை எலியைப் பார்த்தது. உடனே அதைக் கௌவிச் சென்றது.

**5. இந்தக் கதையை உன் சொற்களால் சொல்.**

ஒரு பாட்டி வீட்டில் ஒரு பழைய பானை இருந்தது. அதில் ஒரு சிறு ஓட்டை இருந்தது. அந்த ஓட்டை வழியே ஒரு சுண்டெலி பானைக்குள் புகுந்தது; நெல்லைத் தின்றுவிட்டது. அதனால் அதன் வயிறு ஊதிப் பருத்து விட்டது. ஆகையால் அந்தச் சுண்டெலியால் வெளியே வர முடியவில்லை. மறுநாள் காலையில் கிழவி பானையைத் திறந்தாள். அவள் பக்கத்தில் வந்த பூனை எலியைக் கௌவிக்கொண்டு போய்விட்டது.

**6. இதனால் நீ தெரிந்துகொள்ளும் நீதி யாது?**

"கள்ள வழியில் செல்பவர்களுக்குத் துன்பம் உண்டாகும்" — "நல்ல வழியில் நடப்பவர்களுக்குத் தெய்வம் துணை செய்யும்" என்னும் நீதிகளைத் தெரிந்து கொள்ளலாம்.

## 8. நமது ஆடை

### அருஞ்சொற்பொருள்

**அரை** - பாதி

**பெரும்பாலும்** - அனேகமாக

**பருத்தி** - பஞ்சு

**ஏற்றவை** - தகுந்தவை

**பாவு** - நெய்யும் துணிக்குத் தகுந்தபடி நூலை நீட்டி அமைப்பது

**தறி** - துணி நெய்யும் கருவி

### வினா–விடை

**1. நூல் எதனால் நூற்கப்படுகிறது?**

பக்குவம் செய்த பஞ்சைப் பட்டையிடுவார்கள். பிறகு அதை நூலாக நூற்பார்கள்.

**2. பஞ்சில் உள்ள கொட்டையை நீக்கும் கருவி எது?**

பஞ்சில் உள்ள கொட்டையை நீக்கும் கருவி திரிமணை என்பதாகும்.

**3. நூல் நூற்கும் கருவிகளின் பெயர்கள் யாவை?**

நூல் நூற்கும் கருவிகளின் பெயர்கள் தக்கிளி, இராட்டினம் என்பவை ஆகும்.

**4. துணி, மடி—இந்தப் பெயர்கள் வழங்கக் காரணம் என்ன?**

ஆடையைத் தறியிலிருந்து துணிப்பதால் துணி என்று கூறப்படுகிறது. துணித்த துணி ஒழுங்காக மடிக்கப்படுவதால் மடி என்று கூறப்படுகிறது. துணிப்பது - வெட்டுவது.

**5. நாம் ஏன் ஆடை உடுத்துகிறோம்?**

நமது உடலை அழகு செய்யவும், பனியும் குளிரும் நம்மை வருத்தாமல் பாதுகாக்கவும் நாம் ஆடை உடுத்து கிறோம்.

**6. நாம் பெரும்பாலும் உடுத்தும் ஆடை எது?**

நாம் பெரும்பாலும் பருத்தி ஆடைகளையே உடுத்து கிறோம்.

**7. குளிர் காலத்திற்கு ஏற்ற உடைகள் எவை?**

பட்டு உடையும், கம்பளி உடையும் குளிர் காலத்திற்கு ஏற்றவை?

**8. பஞ்சு எப்படிக் கிடைக்கிறது?**

பருத்திச் செடியிலிருந்து பருத்திக்காய் முற்றியபின் உலர்ந்து வெடிக்கும். அதிலிருந்து பஞ்சு வெளிப்படும். அதில் கொட்டைகள் இருக்கும். திரிமணையால் பஞ்சில் உள்ள கொட்டைகள் நீக்கப்படும். பின் அப்பஞ்சை 'வில்' என்னும் பஞ்சு அடிக்கும் கருவியால் பக்குவம் செய்வார்கள். இதுவே நூல்நூற்க உதவும் பஞ்சு ஆகும்.

**9. நூல் எப்படித் துணியாகிறது?**

நெசவாளர்கள் நூலால் பாவு அமைப்பார்கள். அதைத் தறியில் இட்டு நெய்வார்கள். நெய்த ஆடையைத் தறியிலிருந்து துணிப்பார்கள். இதுவே துணி ஆகும்.

## 9. பயிலுவோம்

### வினு-விடை

**1. வண்டு எங்கு மொய்க்கும்?**
தேன் இருக்கும் இடத்தைத் தேடி வண்டு மொய்க்கும்.

**2. எறும்பு எந்த இடத்தைத் தேடி ஊரும்?**
சீனி உள்ள இடத்தைத் தேடி எறும்பு ஊரும்.

**3. கிளி எதைப் பார்த்துச் செல்லும்?**
பழம் நிறைந்த சோலையைப் பார்த்துக் கிளி செல்லும்.

**4. மக்கள் எங்கு வந்து சேருவார்கள்?**
வளம்நிறைந்த நாட்டிலே மக்கள் வந்துசேருவார்கள்.

**5. வெள்ளம் எதைப் பார்த்துப் பாயும்?**
பள்ளமான இடத்தைப் பார்த்து வெள்ளம் பாயும்.

**6. நாம் என்ன செய்ய வேண்டும்?**
நல்ல நல்ல நூல்களை நாடி நாம் படிக்கவேண்டும்.

## 10. பழமொழிகள்

(பாடத்தில் வந்துள்ள பழமொழிகளுக்கு விளக்கம்)

1. அடக்கமாக இருப்பது மற்ற எல்லாவற்றிலும் சிறந்தது.

2. அவசரக்காரன் வேலையைக் கெடுப்பான்.

3. எதையும் அருகில் இருந்து பார்த்தால்தான் உண்மை தெரியும்.

4. நமக்கு உதவி செய்தவரை உயிர் உள்ளவரை மறக்கக்கூடாது.

5. இரண்டு நண்பர்களுள் ஒருவராவது பொறுமை உள்ளவராக இருக்கவேண்டும். இருவருக்கும் பொறுமை இல்லை என்ருல் நட்பு நீடிக்காது.

6. கல்விதான் மற்ற எல்லாவற்றையும் விடப் பெரிய செல்வம்.

7. தகுந்த வாய்ப்புக் கிடைக்கும்போது வேலையைச் செய்து முடித்துக் கொள்ளவேண்டும்.

8. மற்றவர்களுக்குக் கேடு நினைப்பவன் தானே கெட்டுப் போவான்.

9. அரைகுறைப் படிப்பு உள்ளவர்கள் அதிகமாகப் பேசுவார்கள்.

10. கொடுத்த பொருளைப் பக்குவமாகக் கேட்டுவாங்க வேண்டும். அப்படியில்லாவிட்டால் பகை உண்டாகும்.

11. அதிகமாகப் பேசுகிற அவசரக்காரன் வேலைக்கு உதவமாட்டான்.

12. எவருடனும் நெருங்கிப் பழகக் கூடாது. அப்படிப் பழகினால் உறவு கெடும்.

13. நோய் இல்லாமல் வாழ்வது பெரிய செல்வம்.

14. சிறிது சிறிதாகச் சேமித்தால், அது மிகப் பெரிய சேமிப்பாக ஆகிவிடும்.

15. கிடைத்த அளவில் திருப்தி கொள்வதே சிறந்த வாழ்வு ஆகும்.

16. **பயிற்சி – வேறு சில பழமொழிகள் :**

(அ) ஆடையில்லாத மனிதன் அரைமனிதன்.
(ஆ) நாய் முன் உருட்டிய தேங்காய்.
(இ) பூவோடு சேர்ந்த நார்.
(ஈ) கல் தேயும் சொல் தேயாது.
(உ) எறும்பு ஊரக் கல்லும் குழியும்.
(ஊ) இருதலைக் கொள்ளி எறும்பு.

# 11. வானம்பாடியும் அதன் குஞ்சுகளும்

## அருஞ்சொற்பொருள்

**பொரிந்து** - வெடித்து
**அறுவடைக் காலம்** - நெல் கதிர்களை அறுக்கும் காலம்
**உரியவர்** - சொந்தக்காரர்
**புதல்வன்** - மகன்
**மைந்தன்** - மகன்
**அஞ்ச** - பயப்பட
**நிகழ்ந்ததை** - நடந்ததை
**இயலாது** - முடியாது
**உறுதி** - முடிவு

## வினா–விடை

**1. வானம்பாடி எங்கு இருந்தது ?**

ஒரு வானம்பாடி நெல் வயலில் கூடுகட்டி இருந்தது ; அதில், சில முட்டைகளை இட்டது. அம்முட்டைகள் பொரிந்து குஞ்சுகள் வெளிவந்தன. வானம்பாடி அவற்றை அன்புடன் காப்பாற்றி வந்தது.

**2. வானம்பாடி குஞ்சுகளிடம் என்ன கூறியது ?**

வயலில் நெல் முற்றி அறுவடைக்காலம் நெருங்கியது. ஒருநாள் வானம்பாடி தன் குஞ்சுகளைப் பார்த்து, "நான் இல்லாதபோது இங்கு யாராவது வந்தால், அவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதைக் கவனித்து என்னிடம் சொல்லவேண்டும்," என்று கூறியது.

**3. குஞ்சுகள் யாரைப் பார்த்தன ?**

குஞ்சுகள் வயலுக்கு உரியவரையும் அவர் மகனையும் பார்த்தன.

**4. வயலுக்கு உரியவர் என்ன சொன்னார் ?**

வயலுக்கு உரியவர் தம் மகனிடம், "நாளைக்குச் சிலரை அழைத்து வந்து அறுவடை செய்துவிட வேண்டும்," என்று சொன்னார்.

**5. 'நாம் அஞ்சவேண்டா' என்று வானம்பாடி ஏன் கூறியது ?**

வானம்பாடி, "அவர்கள் வேலைக்காரர்களின் உதவியை வேண்டுகிறார்கள். ஆகையால் நாம் அஞ்ச வேண்டா," என்று குஞ்சுகளிடம் கூறியது.

**6. வானம்பாடியும் குஞ்சுகளும் வேறு வயலுக்குச் சென்றதேன் ?**

"வேலைக்காரர்கள் வருவதாகச் சொல்லி ஏமாற்றி விட்டார்கள். நாளை நாமே வந்து அறுவடை செய்ய வேண்டும்," என்று மறுநாள் தந்தையும் மகனும் பேசிக் கொண்டனர். இதைக் குஞ்சுகள் வானம்பாடியிடம் கூறின. வானம்பாடி, "ஒருவர் மற்றவர் உதவியை எதிர்பார்க்கிற வரையில் தம் காரியத்தைக் குறித்த காலத்தில் செய்யமுடியாது. வயலுக்கு உரியவர் தாமே அறுவடை செய்ய உறுதி செய்து விட்டதால், நாளை கட்டாயம் வருவர். நாம் உடனே வேறு இடம் போக வேண்டும்," என்று கூறித் தன் குஞ்சுகளுடன் வேறு வயலுக்குப் பறந்து போய்விட்டது.

# 12. ஆகாய விமானம்

## வினா-விடை

**1. ஆகாய விமானம் எப்படிப் பறக்கிறது ?**

இறகு அடிக்காமலே ஆகாய விமானம் பறக்கிறது.

**2. அது விரைந்து பறக்கும் போதும் என்ன செய்கிறது ?**

அது விரைந்து பறக்கும் போதும் மக்கள் பலரைச் சுமந்து செல்கிறது ?

**3. அது எவற்றைத் தாண்டுகிறது ?**

அது வரண்ட பாலை நிலத்தையும், மலையையும், கடலையும் தாண்டுகிறது.

**4. ஆகாய விமானம் விரும்பும் செயல்கள் எவை ?**

நீல வானில் பறப்பதும், நீண்ட தொலைவு செல்வதும் ஆகாய விமானம் விரும்பும் செயல்கள் ஆகும்.

## 13. எறும்புகள்

### அருஞ்சொற்பொருள்

**ஆராய்ந்த** - நன்றாகக் கண்டு அறிந்த

**கருத்து** - எண்ணம்

**பருத்துள்ள** - பெரியதாக இருக்கிற

**கருமை** - கறுப்பு

**வருந்தி** - கஷ்டப்பட்டு

**ஊர்ந்து** - நகர்ந்து

**மோப்பம்** - வாசனை

**சாரைசாரையாய்** - வரிசை வரிசையாய்

**கிட்டும்** - கிடைக்கும்

**செவ்வெறும்பு** - சிவப்பு எறும்பு

**பெறும்** - அடைகின்ற

**ஊர** - ஊர்ந்து செல்ல

**குழியும்** - பள்ளமாகும்

### வினா-விடை

**1. எறும்புகள் எப்படி வாழ்கின்றன ?**

எறும்புகள் புற்றுக்களைக் கட்டிக்கொண்டு வாழ்கின்றன. மழைக்காலத்திற்கு வேண்டும் உணவை வெயிற் காலத்திலேயே சேர்த்து வைத்துக்கொள்கின்றன. அவை கூட்டம் கூட்டமாய்க் கூடிவாழ்கின்றன; உழைத்துச் சேர்க்கும் பொருள்களை உண்டு உயிர் வாழ்கின்றன.

**2. எறும்புகளின் வகைகள் யாவை ?**

சிற்றெறும்பு, செவ்வெறும்பு, பிள்ளையார் எறும்பு, கட்டெறும்பு எனப் பலவகை எறும்புகள் இருக்கின்றன.

**3. எறும்பு எதனால் பொருள்களை அறிகிறது ?**

எறும்பு மோப்பத்தாலேயே பொருள்களை அறிந்து கொள்கிறது.

**4. எறும்புகளுள் எவை என்ன வேலைகள் செய்யும்?**

சில எறும்புகளுக்குச் சிறகு உண்டு. அவை பறக்கும். சில எறும்புகள் வேலைக்கார எறும்புகள். இவை தரையிலும், சுவர்களிலும் சாரைசாரையாகச் சென்று இரை தேடி இழுத்துவந்து புற்றில் சேர்க்கும். பெண் எறும்புகள் முட்டையிடும். முட்டைகளை வேலைக்கார எறும்புகள் பாதுகாக்கும்.

**5. நம்மைக் கடிக்கும் எறும்புகள் எவை?**

சிற்றெறும்பும், செவ்வெறும்பும், கட்டெறும்பும் நம்மைக் கடிக்கும். அவை கடித்தால் நமக்கு வலிக்கும். பிள்ளையார் எறும்பு நம்மைக் கடிக்காது.

**6. எறும்பைப்பற்றி வழங்கும் பழமொழி எது?**

"எறும்பு ஊரக் கல்லும் குழியும்" என்பது எறும்பைப்பற்றி வழங்கும் பழமொழி ஆகும்.

## 14. வழக்காடிய பூனைகள்

### அருஞ்சொற்பொருள்

| | |
|---|---|
| முக்காற்பங்கு - நான்கில் மூன்று பங்கு | வாதம் - தர்க்கம் |
| | பகுதி - பங்கு |

### வினா–விடை

**1. பூனைகளுக்கு ஏன் சண்டை ஏற்பட்டது?**

கறுப்புப்பூனை, வெள்ளைப்பூனை ஆகிய இரண்டும் ஓர் அப்பத்தைத் திருடின. அதைப் பங்கிடுவதில் அவற்றுக்குச் சண்டை ஏற்பட்டது.

**2. கறுப்புப் பூனை என்ன கூறியது?**

"நான்தான் முதலில் அப்பத்தைப் பார்த்தேன். அதில் முக்காற்பங்கு எனக்கு உரியது," என்று கறுப்புப் பூனை கூறியது.

**3. வெள்ளைப் பூனை என்ன கூறியது?**

"அதைத் திருடலாம் என்று நானே முதலில் சொன்னேன். ஆகையால் என் பங்கே அதிகமாய் இருக்க வேண்டும்," என்று வெள்ளைப்பூனை வாதாடியது.

**4. குரங்கு என்ன நினைத்தது?**

மரத்திலிருந்து பூனைகளின் சண்டையைப் பார்த்துக் கொண்டிருந்த குரங்கு, "பூனைகளுக்குள் ஒற்றுமை

இல்லை. நாம் இவற்றை ஏமாற்றுவது எளிது,'' என்று நினைத்தது.

**5. குரங்கு பூனைகளிடம் என்ன கூறியது?**

குரங்கு பூனைகளை நோக்கி, '' நண்பர்களே, சண்டை இடாதீர்கள். நான் அப்பத்தை உங்களுக்குச் சரியாகப் பங்கிட்டுத் தருகிறேன். அதை என்னிடம் கொடுங்கள்,'' என்று கூறியது. பூனைகள் குரங்கிடம் அப்பத்தைக் கொடுத்தன.

**6. அது என்ன செய்தது?**

குரங்கு அப்பத்தை இரு துண்டாக்கியது. ஒன்று பெரியது. மற்றது சிறியது. பெரிய துண்டில் ஒரு பகுதியைக் குரங்கு கடித்துத் தின்றது. அதனால் மற்றத் துண்டு பெரிதாயிருந்தது. குரங்கு அதில் ஒரு பகுதியைக் கடித்துத் தின்றது. இரண்டு மூன்று முறை இப்படியே செய்ததால் இரண்டு சிறிய துண்டுகளே மிச்சமாயின.

**7. பூனைகள் குரங்கிடம் என்ன கூறின?**

பூனைகள் வயிறு எரிந்து, குரங்கைப்பார்த்து, '' நீ பங்கிட்டது போதும். மிச்சமிருக்கும் துண்டுகளைக் கொடுத்துவிடு. நாங்கள் போய் விடுகிறோம்,'' என்று கூறின.

**8. குரங்கு மிச்சமிருந்த துண்டுகளை என்ன செய்தது?**

'' இதுவரை நான் செய்த வேலைக்குக் கூலி '' என்று கூறி மிச்சமிருந்த துண்டுகளைக் குரங்கு வாயில் போட்டுக் கொண்டு ஓடிப்போய் விட்டது.

**9. பூனைகள் ஏமாற்றம் அடைந்ததற்குக் காரணம் என்ன?**

ஒற்றுமையாக இல்லாததும், புத்தி இல்லாததுமே பூனைகள் ஏமாற்றம் அடைந்ததற்குக் காரணம் ஆகும்.

# 15. நாயின் நல்லறிவு

## அருஞ்சொற்பொருள்

**கவிஞர்** - பாட்டு எழுதும் புலவர்
**கருத்தை** - எண்ணத்தை
**அலர்ந்து இருந்தன** - பூத்து இருந்தன
**கண் இமையாமல்** - கண் சிமிட்டாமல்
**மகிழ்ச்சி** - சந்தோஷம்
**வியப்பு** - ஆச்சரியம்
**கவி** - பாட்டு

### வினு-விடை

**1. வில்லியம் கூப்பர் யார்?**

வில்லியம் கூப்பர் இங்கிலாந்து நாட்டைச் சேர்ந்த கவிஞர்.

**2. அவர் வழக்கம் எது?**

அவர் ஒரு நாயை அன்போடு வளர்த்தார். அதை அழைத்துக் கொண்டு மாலே நேரத்தில் ஆற்றங் கரையில் உலாவச் செல்வது அவர் வழக்கம்.

**3. கவிஞர் என்ன செய்ய முயன்ருர்?**

ஒருநாள் அவர் ஆற்றங்கரையில் உலாவி வந்தார். ஆற்றில் ஓர் இடத்தில் அல்லி மலர்கள் மலர்ந்திருந்தன. அவை எட்டாத தூரத்தில் இருந்தன. கவிஞர் தம் வளே தடியால் ஒரு பூவை இழுத்துப் பறிக்க முயன்ருர். அவ ரால் முடியவில்லே.

**4. மலர் பறிக்க முடியாத கவிஞர் செய்ததென்ன?**

அல்லி மலரைப் பறிக்க முடியாத கவிஞர், அதை விட்டு நெடுந்தூரம் உலாவினர். வீட்டுக்குத் திரும்புகை யில், மீண்டும் அல்லி மலர்கள் இருந்த இடத்திற்கு வந்தார். அந்த மலர்களேயே பார்த்து நின்ருர்.

**5. நாய் என்ன செய்தது?**

அவருடன் வந்த நாய் அதை அறிந்து ஆற்றில் பாய்ந்தது; ஒரு மலரை வாயால் கௌவிப் பறித்துக் கொண்டு கரைக்கு வந்தது; கவிஞர் காலடியில் மலரை வைத்தது; தன் மகிழ்ச்சியைக் காட்ட வாலே ஆட்டியது.

**6. கவிஞர் நாயை எப்படிப் பாராட்டினர்?**

கவிஞர் நாயின் நல்லறிவை உலகத்தாருக்கு அறி விக்க எண்ணினர். அந்த நிகழ்ச்சியை அமைத்து அழகான கவி ஒன்றைப் பாடினர்.

## 16. கொக்கும் நண்டும்

### அருஞ்சொற்பொருள்

**வலேஞர்** - மீன்பிடிப்பவர்
**சுற்றம்** - உறவினர்
**உடன்பட்டன** - ஒப்புக் கொண்டன
**அலகு** - பறவையின் மூக்கு
**பாறை** - பாருங்கல்
**உலர்த்திற்று** - காயவைத்தது
**கருணையை** - இரக்கத்தை
**சூழ்ச்சியை** - தந்திரத்தை
**கவைக்கால்** - கொடுக்கு

## வினு-விடை

**1. கொக்கு என்ன சூழ்ச்சி செய்தது?**

கொக்கு வருத்தத்துடன் குளக்கரையில் நின்றது. ஒரு மீன் வருத்தத்துக்குக் காரணம் கேட்டது. வலைஞர் அந்தக் குளத்தில் மீன் பிடிக்கப் போவதாகவும் அதனுல் தான் வருந்துவதாகவும் கொக்கு கூறியது. மீன் தங்களைக் காப்பாற்றும்படி கொக்கை வேண்டியது. கொக்கு அங்கிருந்த மீன்களைத் தன் அலகில் கௌவிச் சென்று தின்றது; மீதியை ஒரு பாறையில் உலர்த்தியது.

**2. நண்டு கொக்கை எப்படி ஏமாற்றியது?**

ஒரு நண்டு தன்னையும் காப்பாற்றும்படி கொக்கை வேண்டியது. கொக்கு நண்டைத் தூக்கிக்கொண்டு சென்றது; பாறைமீது கிடந்த மீன்களை நண்டு பார்த்து, கொக்கின் சூழ்ச்சியை அறிந்தது; தன்னைப் பழைய படி குளத்திற்குக் கொண்டுபோனுல் தன் குடும்பத்தையும் அழைத்து வருவதாகக் கூறியது. பேராசை பிடித்த கொக்கு அப்படியே செய்தது. குளத்தை அடைந்தவுடன், நண்டு கொக்கின் கழுத்தைத் தன் கொடுக்கால் நறுக்கிக் கொன்றது.

**3. இக்கதையை நண்டு சொல்லுவதுபோல் சொல்.**

"நான் இருந்த குளத்தில் பல மீன்களும் இருந்தன. ஒருநாள் ஒரு கொக்கு வருத்தத்துடன் கரையில் நின்றது. ஒரு மீன், "ஏன் வருத்தமாய் இருக்கிருய்?" என்று கொக்கைக் கேட்டது. வலைஞர் எல்லா மீன்களையும் பிடிக்கப் போவதால் வருத்தமாய் இருப்பதாகக் கொக்கு கூறியது. அந்த மீன் தங்களைக் காப்பாற்றும்படி கொக்கை வேண்டியது. கொக்கு அந்த மீன்களை வேறு குளத்திற்குக் கொண்டுபோவதாகக் கூறியது. மீன்கள் அதன் பேச்சை நம்பின. கொக்கு தன் அலகில் ஒவ்வொரு மீனுகக் கௌவிச் சென்றது.

" நான் என்னையும் வேறு குளத்திற்குக் கொண்டு போகும்படி கேட்டேன். கொக்கு என்னைத் தூக்கிக் கொண்டு சென்று ஒரு பாறைமேல் உட்கார்ந்தது. அங்கே மீன்கள் உலர்ந்துகொண்டிருந்தன. நான் கொக்கின் சூழ்ச்சியை அறிந்தேன். என்னை மறுபடியும் குளத்திற்கு அழைத்துப் போனுல் என் குடும்பத்தாரையும் அழைத்து வருவதாகக் கொக்கிடம் கூறினேன். கொக்கு அதை நம்பியது. என்னை மறுபடியும் குளத்திற்குக்

கொண்டுபோனது. நான் என் கொடுக்கால் அதன் கழுத்தை நறுக்கிக் கொன்றேன்.''

**4. பின்வரும் சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுது :**

கெஞ்சியது, வேறு, நம்பி, பாறை, பேராசை.

மீன் தன்னைக் காப்பாற்றும்படி **கெஞ்சியது**.
நண்டு **வேறு** குளத்துக்குப் போக நினைத்தது.
மீன் கொக்கை **நம்பி** அதற்கு உடன்பட்டது.
கொக்கு மீன்களைப் **பாறை**மீது உலர்த்தியது.
**பேராசை** கொண்ட கொக்கை நண்டு கொன்றது.

# 17. குருடரும் யானையும்

## அருஞ்சொற்பொருள்

**அறுவர்** - ஆறுபேர்
**யானைப்பாகன்** - யானை ஓட்டுபவன்
**அணுகினர்** - நெருங்கினர்
**நீண்டிருந்தன** - நீளமாக இருந்தன
**நுனி** - முனை
**துதிக்கை** - தும்பிக்கை
**மொழிந்தான்** - கூறினான்
**புலப்பட்டது** - காணப்பட்டது
**சாதித்தான்** - உறுதியாகச் சொன்னான்
**வாதாடினர்** - தர்க்கம் செய்தனர்

## வினா-விடை

**1. குருடர்கள் யானைப்பாகனை என்ன கேட்டனர் ?**

ஆறு குருடர்கள் யானையைப்பற்றித் தெரிந்து கொள்ள விரும்பினர் ; அந்த ஊர்க் கோவிலுக்குச் சென்று யானையைத் தங்களுக்குக் காட்டும்படி யானைப்பாகனை வேண்டினர்.

**2. குருடர்கள் பாகனுக்கு என்ன பதில் கூறினர் ?**

"குருடர்களாகிய நீங்கள் யானையை எப்படிப் பார்க்க முடியும் ?'' என்று யானைப்பாகன் கேட்டான். "நாங்கள் அதைத் தொட்டுப் பார்த்தே தெரிந்துகொள்வோம்,'' என்று குருடர்கள் பதில் கூறினர்.

**3. யானையின் காது எதைப்போல இருக்கிறது ?**

யானையின் காது முறம்போல இருக்கிறது. யானையின் காதைத் தடவிப்பார்த்த ஐந்தாம் குருடன் 'யானை முறம்போல இருக்கிறது' என்று கூறினான்.

**4. ஈட்டியைப் போன்ற உறுப்பு எது?**

யானையின் தந்தம் ஈட்டிபோல இருக்கிறது. தந்தத்தைத் தடவிப்பார்த்த இரண்டாம் குருடன், "யானை ஈட்டியைப்போல இருக்கிறது," என்றான்.

**5. யானைத் தந்தங்கள் எப்படி இருந்தன?**

அவை நீண்டிருந்தன. தொடுவதற்கு வழுவழுப்பாய் இருந்தன. அவற்றின் நுனி கூர்மையாய் இருந்தது.

**6. சுவர்போலக் காணப்பட்டது எது?**

யானையின் உடல் சுவர்போலக் காணப்பட்டது. உடலைத் தடவிப்பார்த்த முதலாம் குருடன், "யானை சுவர்போல இருக்கிறது," என்றான்.

**7. உலக்கைபோலக் காணப்பட்டது எது?**

யானையின் துதிக்கை உலக்கைபோலக் காணப்பட்டது. அதைத் தடவிப்பார்த்த மூன்றும் குருடன், "யானை உலக்கைபோல இருக்கிறது," என்றான்.

**8. மரம்போலக் காணப்பட்டது எது?**

யானையின் கால் மரம்போலக் காணப்பட்டது. அதைத் தடவிப்பார்த்த நான்காம் குருடன், "யானை மரத்தைப்போல இருக்கிறது," என்றான்.

**9. கயிறுபோலக் காணப்பட்டது எது?**

யானையின் வால் கயிறுபோலக் காணப்பட்டது. அதைத் தடவிப்பார்த்த ஆறும் குருடன், "யானை கயிற்றைப்போல இருக்கிறது," என்றான்.

**10. குருடர்கள் யானையின் முழு வடிவத்தை ஏன் காணவில்லை?**

குருடர்கள் ஒவ்வொருவரும் யானையின் ஒவ்வோர் உறுப்பையே கண்டனர். தாம் அறிந்ததே உண்மை என்று வாதாடினர். ஆதலால், அவர்களுள் ஒருவரும் யானையின் முழு வடிவத்தையும் காணவில்லை.

# 18. பலவகை ஊர்திகள்

## அருஞ்சொற்பொருள்

விரைந்து - வேகமாக

நெடுந்தூரம் - மிகுந்ததொலை

உறங்குவார்கள் - தூங்குவார்கள்

விழிப்புடன் - தூங்காமல்

வான் - வானம்

வானஊர்தி - ஆகாயவிமானம்

மாற்றம் - வேறுபாடு

## வினு—விடை

**1. ஊர்திகள் என்ருல் என்ன ?**

நாம் இடம்விட்டு இடம்செல்ல உதவும் கருவிகள் ஊர்திகள் எனப்படும்.

**2. நாம் பயணம் செய்யும் ஊர்திகள் எவை ?**

மாட்டுவண்டி, குதிரைவண்டி, மிதிவண்டி, உந்து வண்டி, பேருந்துவண்டி, புகைவண்டி, மின்சார இரயில், வானவூர்தி, படகு, நீராவிக் கப்பல் என்பவை நாம் பயணம் செய்யப் பயன்படும் ஊர்திகள் ஆகும்.

**3. சைக்கிள், மேட்டார் கார், பஸ், இரயில்—இவை ஆங்கிலச் சொற்கள். இவற்றுக்குத் தமிழ்ச் சொற்களை எழுது :**

சைக்கிளுக்கு மிதிவண்டி, மோட்டார் காருக்கு உந்து வண்டி, பஸ்ஸுக்குப் பேருந்து வண்டி, இரயிலுக்குப் புகைவண்டி என்பன தமிழ்ச் சொற்கள் ஆகும்.

**4. ஊர்தி வகைகள் பெருகக் காரணம் என்ன ?**

உலகில் வாழும் மக்களின் நாகரிக வளர்ச்சிக்கு ஏற்ற படி ஊர்திகளின் வகைகளும் பெருகி வருகின்றன.

**5. பழங்கால மக்களின் ஊர்திகள் யாவை ?**

பழங்கால மக்கள் பயணம் செய்ய ஒற்றைமாட்டு வண்டியையும், இரட்டை மாட்டு வண்டியையும் பயன் படுத்தினர்கள். வெயிலும் மழையும் வருத்தாதபடி வண்டிகளுக்குக் கூண்டை அமைத்துக்கொண்டார்கள்.

**6. பழங்காலத்தில் நெடுந்தொலே பயணம் செய்ய என்ன செய்தனர் ?**

பழங்காலத்தில் நெடுந்தொலே பயணம் செய்தவர்கள் இரவிலேயே சென்றனர். மாடுகள் இரவில் அலுப்பில் லாமல் நடந்தன. வண்டி ஓட்டி தூங்காமல் ஓட்டினர்.

**7. வானஊர்திகள் யாருக்குப் பயன்படும் ?**

வானஊர்திகள், வானத்தின் வழியே மிக விரைவாக நீண்ட தொலே செல்ல விரும்புகிறவர்களுக்குப் பயன் படுகின்றன.

**8. நீர்வழிப் பயணத்திற்குப் பயன்படுபவை எவை ?**

படகு, பாய்மரக்கப்பல் என்பவை பழங்காலத்தில் பயன்பட்டு வந்தன. இப்போது நீராவிக்கப்பல்களும், டீசல் எண்ணெய்க் கப்பல்களும் பயன்படுகின்றன.

**9. நீராவியால் செல்லும் ஊர்திகள் யாவை?**

புகைவண்டிகள் நீராவிச் சக்தியால் தண்டவாளத்தின்மீது செல்லும். கப்பல்கள் நீராவிச் சக்தியால் கடலில் செல்லும்.

**10. பெட்ரோல் உதவியால் செல்பவை எவை?**

உந்துவண்டி, பேருந்துவண்டி, வானவூர்தி முதலியவை பெட்ரோல் உதவியால் செல்பவை ஆகும்.

## 19. ஈக்கள்

### அருஞ்சொற்பொருள்

நுண்ணிய - மெல்லிய
விசித்திரமான - அதிசயமான
உறிஞ்சி - உள்ளே இழுத்து
உறுப்பு - உடலின் ஒரு பாகம்
கிருமி - மிகச் சிறிய புழு
பருக - குடிக்க

### வினு-விடை

**1. ஈக்களுக்குப் பிறப்பிடங்கள் எவை?**

நம் வீடுகளில் சேர்த்து வைக்கும் குப்பை கூளங்களும் சாணியுமே ஈக்களுக்குப் பிறப்பிடம் ஆகும்.

**2. ஈக்கள் எப்படி வாழ்கின்றன?**

ஈக்கள் ஏராளமான முட்டைகள் இடும். அவற்றிலிருந்து புழுக்கள் போன்று ஈக்குஞ்சுகள் வரும். அழுகிய பொருள்களிலும் குப்பைகூளங்களிலும் உள்ள அழுக்கே அவற்றின் இரை. மழைக் காலத்தில் அவை அழியும்.

**3. ஈயின் அமைப்பு யாது?**

ஈக்குக் கால்கள் ஆறு. சிறகுகள் இரண்டு. கால்களிலும் உடலிலும் நுண்ணிய மயிர்கள் அடர்ந்திருக்கும். ஈயின் தலையில் இரு பெரிய கண்கள் உண்டு. நம் கண்ணுக்குத் தெரியாத சிறிய பொருளையும் ஈ நன்ருகப் பார்க்கும். வாய் அருகில் உள்ள துடுப்புப் போன்ற உறுப்பை ஈ வெளியில் நீட்டி இரையை உட்கொள்ளும்.

**4. ஈக்களால் உண்டாகும் தீமை யாது?**

அழுக்குகளில் ஈ மொய்க்கும். அதன் கால்களில் அழுக்கு ஒட்டிக்கொள்ளும். அது நம் உணவுப் பொருள்களில் வந்து உட்காரும்போது, அழுக்கு உணவில் கலந்துவிடும். அழுக்கில் கிருமி இருக்கும். அதனுல் நமக்கு நோய் உண்டாகும்.

**5. ஈ சேராதிருக்க என்ன செய்ய வேண்டும்?**

நம் வீடுகளிலும் சுற்றுப் புறங்களிலும் சாணி, குப்பை கூளங்களைச் சேர்க்கக்கூடாது. சாக்கடை நீரைத் தேங்கவிடுதல் கூடாது. இப்படியிருந்தால் ஈ சேராது.

**6. ஈக்கள் இருக்குமிடத்தில் நாம் எப்படி நடந்து கொள்ள வேண்டும்?**

ஈக்கள் மொய்க்காதபடி நாம் உணவுப் பொருள்களை மூடி வைக்கவேண்டும். சாப்பிடும்போது ஈ வந்து இலை யில் உட்காராதபடி கவனித்துக்கொள்ள வேண்டும். ஈ விழுந்த பால் முதலியவற்றைக் குடிக்கக்கூடாது.

**இலக்கணம்**

**தகுந்த வினைச் சொல்லால் கோட்டை நிரப்பு:**

(வருவாயா, வளரும், உண்டாகின்றன, வந்தேன்)

நீ நாளைக்கு என் வீட்டிற்கு வருவாயா?

குஞ்சுகள் அவற்றைத் தின்று வளரும்?

ஈக்கள் எவ்வாறு உண்டாகின்றன?

நான் நேற்று உன் வீட்டிற்கு வந்தேன்.

# 20. மாமல்லபுரம்

## அருஞ்சொற்பொருள்

**மனத்தைக் கவரத்தகுந்த** - மனத்தை இழுக்கத்தகுந்த

**சிற்பத் தொழிலாளர்** - கருங் கல்லிலும், மரத்திலும், உலோகங்களிலும் உருவங் களைச் செதுக்குபவர்கள்

**குடைந்து** - தோண்டி

**அருச்சுனன்** - பஞ்சபாண்டவர் என்று சொல்லப்படும் ஐந்து பேருள் மூன்றுமவன்

**களிக்கின்றார்கள்** - மகிழ்கின் றார்கள்

## வினா—விடை

**1. மாமல்லபுரம் எங்கு இருக்கிறது?**

மாமல்லபுரம் சென்னைக்குத் தெற்கில் 55 கிலோ மீட்டர் தொலைவில் கடற்கரையில் இருக்கிறது. இன்று அது ஒரு சிற்றூர். பழங்காலத்தில் அது கப்பல்கள் வந்து தங்கும் துறைமுகப்பட்டினமாய் இருந்தது.

**2. மாமல்லபுரம்—பெயர்க் காரணம் என்ன?**

பழங்காலத்தில் தொண்டை நாட்டை ஆண்ட பல்ல வர்களுள் சிறந்தவர் முதலாம் நரசிம்மவர்மர். அவர்

சிறந்த வலிமை உள்ளவர். அவரை அனைவரும் மாமல்லர் என வழங்கினர். அவர் பெயரால் அந்த ஊர் மாமல்லபுரம் என்று வழங்கப்பட்டது.

**3. தொண்டை நாட்டின் தலைநகரம் எது ?**

தொண்டை நாட்டின் தலைநகரமாய் விளங்கியது காஞ்சிபுரம் ஆகும்.

**4. துறைமுகப்பட்டினம் என்பது என்ன ?**

கப்பல்கள் வந்து தங்கும் கடற்கரையை உடைய ஊர் துறைமுகப்பட்டினம் ஆகும்.

**5. மாமல்லபுரத்தில் காணப்படுபவை யாவை ?**

மாமல்லபுரத்தில் சிறு குன்றுகளைக் குடைந்து அழகான சிற்பங்கள் செதுக்கப்பட்டிருக்கின்றன. அவற்றுள் அருச்சுனன் தவத்தை விளக்கும் சிற்பங்கள் சிறந்தவை.

## 21. அறிவுள்ள முயல்

### அருஞ்சொற்பொருள்

**விலங்குகள்** - மிருகங்கள்
**இரை** - உணவு
**காலம் தாழ்த்து** - நேரம் கழித்து
**விலங்கரசன்** - (விலங்கு + அரசன்) - சிங்கம்
**நேரிட்டது** - நடந்தது
**கருதியது** - நினைத்தது

### வினா-விடை

**1. விலங்குகள் ஏன் சிங்கத்தைக் கண்டு அஞ்சின ?**

காட்டில் இருந்த சிங்கம் மற்ற விலங்குகளைக் கொன்று தின்றது. அதைக் கண்டு எல்லா விலங்குகளும் அச்சம் கொண்டன.

**2. விலங்குகள் செய்த ஏற்பாடு யாது ?**

விலங்குகள் ஒருநாள் சிங்கத்தைக்கண்டு வணங்கின. "அரசே, நீர் இப்படி எங்களைக் கொன்று வந்தால் விலங்குக் குலமே அழிந்துவிடும். பிறகு உமக்கு இரை கிடைக்காமல் போய்விடும். நாளுக்கு ஒன்றாக எங்களைக் கொன்று தின்றால், உமக்கு என்றைக்கும் இரை கிடைக்கும்," என்று கூறின. இதைச் சிங்கம் ஒப்புக்கொண்டது.





**3. கிழ முயல் ஏன் சிங்கத்தைக் கொல்ல நினைத்தது?**

சிங்கத்தைக் கொன்றால் காட்டில் உள்ள மற்ற விலங்குகள் உயிர் வாழலாம் என்று எண்ணிய கிழமுயல் சிங்கத்தைக் கொல்ல நினைத்தது.

**4. அது என்ன சூழ்ச்சி செய்தது?**

கிழமுயல் தனக்கு முறை வந்த நாளில், சிங்கத்தின் பசிவேளை கழித்துச் சென்றது. சிங்கம் கோபம் கொண்டு காரணம் கேட்டது. முயல், தான் வழியில் வேறு ஒரு சிங்கத்தைப் பார்த்துப் பயந்து, புதரில் ஒளிந்திருந்து, அது போனபின் ஓடிவந்ததாகக் கூறியது. சிங்கம் அந்த வேறு சிங்கத்தைக் காட்டும்படி கேட்டது. ஒரு பாழடைந்த கிணற்றுக்குள் தான் கண்ட சிங்கம் இறங்கியதாக முயல் கூறியது.



**5. சிங்கம் ஏன் கிணற்றில் பாய்ந்தது?**

முயல் கூறியதைக் கேட்ட சிங்கம், பாழடைந்த கிணற்றில் வேறு சிங்கம் இருக்கிறதா என்று எட்டிப் பார்த்தது; சேற்று நீரில் தன் உருவம் தெரிந்தது; அதை வேறு சிங்கம் என நினைத்தது; அதைக் கொல்லக் கிணற்றில் பாய்ந்தது; சேற்றில் அமுந்தி இறந்தது.

**6. இதைக் கிழ முயலே சொல்வதுபோல எழுது.**

ஒரு காட்டில் ஒரு சிங்கம் இருந்தது. அது விலங்குகளைத் தன் விருப்பப்படி கொன்று தின்றது. எல்லா விலங்குகளும் அச்சம் அடைந்தன. ஒரு நாள் நாங்கள் சிங்கத்தைக் கண்டு வணங்கினோம். "அரசே நீர் இப்படி எங்களைக் கொன்றால் உமக்கு இரை கிடைக்காமல் போய் விடும். தினம் ஒன்றாகக் கொன்றால் என்றைக்கும் உமக்கு இரை கிடைக்கும்," என்று சொன்னோம். அது ஒப்புக் கொண்டது. சில நாள் இப்படியே நடந்தது.

ஒரு நாள் என் முறை வந்தது. எப்படியாவது சிங்கத்தைக் கொல்லவேண்டும் என்று நான் தீர்மானித்தேன்; அதன் பசிவேளை கழித்துச் சென்றேன். சிங்கம் கோபங் கொண்டு காரணம் கேட்டது. "அரசே, நான் வழியில் வேறு ஒரு சிங்கத்தைப் பார்த்தேன். புதரில் ஒளிந்திருந்து, அது போன பிறகு ஓடிவந்தேன்," என்று கூறினேன். சிங்கம், அதைக் காட்டும்படி கேட்டது. ஒரு பாழடைந்த கிணற்றில் புதிய சிங்கம் இறங்கியதாகக் கூறினேன். சிங்கம் அக்கிணற்றில் எட்டிப் பார்த்தது.

சேற்று நீரில் அதன் உருவம் தெரிந்தது. அதை வேறு சிங்கம் எனக் கருதிய சிங்கம் கிணற்றில் பாய்ந்தது; சேற்றில் அழுந்தி இறந்தது. நான் மற்ற விலங்குகளுக்கு இச் செய்தியைத் தெரிவித்தேன். அவை என் அறிவைப் பாராட்டின.

## 22. தாமரைப்பூ

### அருஞ்சொற்பொருள்

முன்னோர் - நமக்கு முன்னால் வாழ்ந்த பெரியவர்கள்
அலரும் - பூக்கும்
எண்ணற்ற - பல
மணம் - வாசனை
பசுமை - பச்சை
ரீங்காரம் - சத்தம்
குவிந்து - மூடி

### வினா-விடை

**1. நான்கு வகைப் பூக்கள் எவை?**

கோட்டுப்பூ, கொடிப்பூ, நீர்ப்பூ, நிலப்பூ என்பவை நான்கு வகைப் பூக்கள் ஆகும்.

**2. நம் நாட்டு மலர்களுள் சிறந்தது எது?**

நம் நாட்டு மலர்களுள் சிறந்தது தாமரைப்பூ.

**3. நாளம், மொட்டு என்பவை எவற்றிற்குப் பெயர்?**

தாமரைக் கொடியை நாளம் என்றும் தண்டு என்றும் கூறுவார்கள். அரும்பை மொட்டு என்று கூறுவார்கள்.

**4. தாமரை எப்படி இருக்கும்?**

தாமரை மலர் அழகாக இருக்கும். அதில் நல்ல மணமும் தேனும் உண்டு.

**5. தாமரை இலையில் ஏன் தண்ணீர் ஒட்டுவதில்லை?**

தாமரை இலை தட்டுப்போல் வட்டமாய் இருக்கும். இலையில் சுணை பொருந்தி இருக்கும். அதனால் அதில் தண்ணீர் ஒட்டுவது இல்லை.

**6. தாமரைப் பூக்களுள் எத்தனை வகை உண்டு?**

தாமரைப் பூவில் பலவகை உண்டு. அவை வெண்டாமரை, செந்தாமரை, நீலத்தாமரை என்பவை ஆகும்.

# 23. ஒற்றுமையே வெற்றிக்கு வழி

### அருஞ்சொற்பொருள்

மைந்தர் - பிள்ளைகள்
ஒற்றுமை - பிரிந்து விடாமல் ஒன்று சேர்ந்திருப்பது
சூழ்ச்சி - தந்திரம்
சுள்ளி - மெல்லிய விறகுக் கழி
முரி - ஒடி
ஏவினர் - செய்யச் சொன்னர்
நன்றிதை - (நன்று + இதை) நல்லதாகிய இதை
தேர்ந்திடல்வேண்டும்- தெரிந்து கொள்ள வேண்டும்
கருத்தில் - நினைவில்
இருத்துங்கள் - பதிய வையுங்கள்

### வினு-விடை

**1. கிழவர் எதை விரும்பினர்?**

கிழவர் தம் மைந்தருக்கு ஒற்றுமையைக் கற்பிக்க விரும்பினர்.

**2. கிழவர் செய்த சூழ்ச்சி யாது?**

கிழவர் தம் மைந்தர் மூவரையும் தாம் படுத்திருந்த அறைக்கு அழைத்தார். சமையல் அறையில் இருந்த சுள்ளிக்கட்டினை எடுத்துவரச் சொன்னர். அதை அவிழ்க்காமல் முரிக்கும்படி தம் மைந்தர்களை ஏவினர்.

**3. சுள்ளிக்கட்டினை ஏன் முரிக்க இயலவில்லை?**

சுள்ளிக்கட்டில் பல சுள்ளிகள் இருந்தன. அவை ஒரே கட்டாய்க் கட்டப்பட்டு இருந்தன. அதனல் அதை முரிக்க அவர்களால் முடியவில்லை.

**4. இந்தப் பாடத்தால் நீ என்ன அறிகிருய்?**

"சேர்ந்து வாழ்வதே சிறந்த வலிமை" என்பதை நான் அறிகிறேன்.

**5. எதிர்ச்சொல் எழுது:**

பிரி × சேர், நன்று × தீது, ஞானம் × அஞ்ஞானம்

### இலக்கணம்

பின்வரும் வாக்கியத்தில் கோடு உள்ள இடங்களில் தகுந்த நிறுத்தக் குறிகளை இடு.

தாய், தன் மகனைப் பார்த்து, "மகனே, நீ ஒழுங்காகப் பள்ளிக்குச் சென்று, கல்வி கற்க வேண்டும்," என்று கூறினுள்.

# 24. ஆறு சொன்ன வரலாறு

### பயிற்சி

**1. ஆற்றின் வரலாற்றை உன் சொற்களால் எழுது :**

ஆறு, மலையையும் காட்டையும் கடந்து வருகிறது; சமவெளியில் இறங்கித் தவழ்ந்து வருகிறது; அணையை மோதி மதகுகளில் நுழைந்து வருகிறது. வாய்க்கால் களில் ஓடி மடைகளைத் திறந்து வயல்களில் பாய்கிறது. நிலத்தின் வெப்பத்தைத் தணிக்கிறது. இதனால் நன்ருகப் பயிராவதைக் கண்குளிரப் பார்க்கிறது. பூஞ்சோலைகள் உண்டாகும்படி செய்கிறது. பல கால்வாய்களாகப் பிரிந்து நன்செய், புன்செய் நிலங்களில் நீர் இறைக்கிறது. தன் வெள்ளத்தில், மாங்காய், தேங்காய், மலர்கள், கரும்பு, தேன்அடை, தினைக்கதிர் ஆகியவற்றை அடித்து வருகிறது. இரவுபகலாக ஆறு நீண்டவழி ஓடிவந்து கடைசியில் கடலில் கலக்கிறது.

**2. பின்வரும் சொற்களை வாக்கியங்களில் அமைத்து எழுது :** (புன்செய், இறைத்து, அள்ளி, வாரி.)

கேழ்வரகு **புன்செய்** நிலத்தில் விளையும்.

உழவர்கள் வயல்களுக்கு நீர் **இறைப்பார்கள்.**

ஆற்று நீரைக் கையில் **அள்ளி** எடுத்தேன்.

பரவிக்கிடக்கும் குப்பைகளை **வாரி** எடு.

# 25. புலவரும் உலோபியும்

### அருஞ்சொற்பொருள்

**புலவர்** - அறிவில் சிறந்தவர்

**வறுமை** - ஏழ்மை

**உலோபி** - ஒருவருக்கும் உதவி செய்யாதவன்

**விளக்கினர்** - தெளிவாகச் சொன்னர்

**வள்ளல்** - அளவில்லாமல் பொருள் கொடுப்பவர்

**பேறு** - பாக்கியம், அதிருஷ்டம்

**அருள்** - இரக்கம்

**ஏவலன்** - வேலைக்காரன்

**வினவினர்** - கேட்டார்

### வினு-விடை

**1. புலவர் பொருள் பெற விரும்பியது ஏன்?**

ஓர் ஊரில் ஒரு புலவர் இருந்தார். அவர் வறுமையால் வாடினர். எனவே, அவர் செல்வர் ஒருவரைப் புகழ்ந்து பாடிப் பொருள் பெற விரும்பினர்.

**2. அவ்வூரில் இருந்த செல்வர் எப்படிப்பட்டவர்?**

அவ்வூரில் இருந்த செல்வர் எச்சில் கையாலும் காக்கையை ஓட்டாதவர். அதனுல் அவரை அனைவரும் 'உலோபி' என்றே வழங்கினர்.

**3. புலவர் செல்வரை என்ன சொல்லிப் பாராட்டினுர்?**

புலவர், செல்வரைக் கொடையில் பாரி, அருளில் புத்தர், கல்வியில் கலைமகள், பொறுமையில் நிலமகள், அழகில் மன்மதர், ஆற்றலில் அருச்சுனர் என்று பாடிப் பாராட்டினுர்.

**4. செல்வர் முதலில் இட்ட கட்டளை என்ன?**

செல்வர் முதலில் தம் ஏவலனை அழைத்துப் புலவருக்குப் பொன்னுடையும், ஐம்பது ரூபாயும் கொண்டு வந்து கொடுக்கும்படி கட்டளையிட்டார்.

**5. செல்வர் இரண்டாவது இட்ட கட்டளை யாது?**

செல்வர் இரண்டாவதாகத் தம் ஏவலனைக் கூப்பிட்டுப் புலவருக்கு ஒரு சால்வை கொண்டுவந்து கொடுக்கும்படி கட்டளையிட்டார்.

**6. செல்வர் முடிவில் என்ன செய்தார்?**

புலவர் புகழ்ந்தவைகளைச் செல்வர் கேட்டு மகிழ்ந்து கொண்டிருந்தார். ஏவலனே எதையும் கொண்டுவர வில்லை. புலவர் தாம் போக விடையளிக்கும்படி கூறினுர். செல்வர், "போய் வாரும்" என்று கூறிவிட்டார். கொடுப்பதாகக் கூறியவை ஒன்றும் வரவில்லையே என்று புலவர் கேட்டார். அந்தச் செல்வர் புலவரை நோக்கி, "நான் மகிழும்படி நீர் பேசினீர், பாடினீர். நீர் மகிழும் படி நானும் சில சொன்னேன். போய் வாரும்," என்று கூறி, உள்ளே போய் விட்டார்.

**7. புலவர் முடிவாக என்ன எண்ணினுர்?**

"ஐயோ, இல்லாதவற்றையெல்லாம் சொல்லி உலோபியைப் புகழ்ந்தது என் குற்றமே," என்று எண்ணித் தம் இல்லத்திற்குச் சென்றுர்.

# 26. நாட்டு எலியும் நகரத்து எலியும்

## அருஞ்சொற்பொருள்

**வரப்பு** - வயல்களுக்கு எல்லையாக அமைக்கும் மேடு

**நகரம்** - பெரிய ஊர்

**உரையாட** - பேச

| | |
|---|---|
| மாளிகை - பெரிய வீடு | பதுங்கியது - மறைந்து கொண்டது |
| கவரும் - இழுக்கும் | |

## வினு-விடை

**1. நாட்டு எலி எங்கு வாழ்ந்தது ?**

நாட்டு எலி, ஒரு நாட்டுப் புறத்தில் ஒரு வயலின் வரப்பில் வளைதோண்டி அதில் வாழ்ந்து வந்தது. வயலில் விளையும் நெற்கதிர்களே அதற்கு உணவு.

**2. நாட்டு எலிக்கு நகரத்து எலி என்ன சொல்லியது ?**

ஒரு நகரத்து எலி நாட்டு எலியைக் காண வந்தது. நாட்டு எலி தான் சேர்த்து வைத்திருந்த நெற்கதிர்களால் நகரத்து எலிக்கு விருந்து செய்தது. விருந்து உண்ட பின், நகரத்து எலி, " நீ நகருக்கு வா. மனிதர் உண்ணும் வகை வகையான உணவுகளை உண்டு, மாளிகையில் வாழலாம்," என்று கூறி நாட்டு எலியை அழைத்தது.

**3. நகர வாழ்வை நாட்டு எலி விரும்பாதது ஏன் ?**

நகரத்து எலியின் வாழ்க்கை அச்சத்திற்கு இட மானது. நாட்டு எலியின் வாழ்க்கை அச்சம் இல்லாதது. நாட்டு எலி பெற்றதை உண்டு அச்சம் இல்லாமல் வாழ்கிறது. ஆதலால், நாட்டு எலி நகரத்து எலியின் வாழ்க்கையை விரும்பவில்லை.

**4. நாட்டு எலி அடைந்த அனுபவங்கள் எவை ?**

நாட்டு எலி நகரத்து எலியுடன் சென்று மாளிகையில் நுழைந்தது. சாப்பிடும் இடத்தில் இலைகளில் பலவித உணவுகள் இருந்தன. நாட்டு எலி ஓடி ஓர் இலையில் வாயை வைத்தது. அந்த வீட்டுப்பூனை அதன்மீது பாய்ந்தது. நாட்டு எலி ஓடி ஓர் இடத்தில் பதுங்கியது. பிறகு இரண்டும் சமையல் அறையில் புகுந்தன. அங் கிருந்த நாய் அவற்றின்மீது பாய்ந்தது. அவை தப்பி யோடின. வேலைக்காரி பெட்டியை நகர்த்தினாள். எலிகள் அஞ்சி ஓடின. அவள் அவற்றின்மீது துடைப்பத்தை எறிந்தாள். நாட்டு எலிக்குக் கால் நொண்டியானது.

**5. நாட்டு எலி நகரத்தில் கண்ட காட்சிகள் எவை?**

அறைகள் பல உள்ள ஓர் அழகான மாளிகை, எங்கும் கண்ணைக் கவரும் பொருள்கள் ஆகியவைகளே நாட்டு எலி நகரத்தில் கண்டவை.

## 27. வருகின்ற பாரதத்தை வரவேற்றல்

### பயிற்சி

**கவிஞர் யார் யாரை வரும்படி அழைக்கிருர் ?**

ஒளிபடைத்த கண் உடையவன், உறுதியான மனம் உடையவன், இனிமையான பேச்சு உடையவன், வலிமை பொருந்திய தோள் உடையவன், தெளிந்த அறிவு உடையவன், கொடுமை கண்டு ஆத்திரம் அடைபவன், ஏழைக்கு இரங்குபவன், ஆண்சிங்கம் போன்ற நடை உடையவன், ஒப்பில்லாத வல்லமை உடையவன், காலையில் உதிக்கும் சூரியன் போன்றவன், அழகு இழந்த நாட்டிற்கு அழகு ஊட்ட வந்தவன், அருச்சுனனைப் போல் சிறப்புகளை விளக்குபவன் ஆகிய பாரத நாட்டு இளைஞனைக் கவிஞர் அழைக்கிருர்.

## 28. காகம்

### அருஞ்சொற்பொருள்

**அலகு** - பறவையின் மூக்கு
**எத்தி** - ஏமாற்றி
**கரையும்** - கூவும்
**சருகு** - உலர்ந்த இலை
**விழிப்புடன்** - சாக்கிரதையாக
**ஊட்டி** - வாயில் உணவைக் கொடுத்து
**தீநாற்றம்** - கெட்ட வாசனை
**கருதுகின்றனர்** - நினைக்கின்றனர்

### வினு-விடை

**1. காகம் எப்படியிருக்கும் ?**

காகத்தின் உடல் கறுப்பாய் இருக்கும். அதன் கழுத்து சாம்பல் நிறமாய் இருக்கும். காகத்தின் அலகு நீண்டு நுனி கூர்மையா யிருக்கும்.

**2. அது எவற்றைத் தின்னும் ?**

காகம், குப்பை கூளங்களைத் தன் அலகினல் கிளறிப் புழுப் பூச்சிகளைக் கொத்தித் தின்னும். செத்த எலிகளையும் அழுகிய பொருள்களையும் கொத்தித் தின்னும் ?

**3. மற்றெரு வகைக் காக்கை எது ?**

காகங்களுள் அண்டங் காக்கை என்பது ஒரு வகை. அதன் உடல் முழுவதும் கழுத்து உட்படக் கறுத்தே இருக்கும்.

**4. காகம் நமக்குச் செய்யும் நன்மைகள் எவை ?**

வீட்டில் இருந்து வெளியில் எறியப்படும் செத்த எலியையும் அழுகிய பொருள்களையும் காகம் தின்கிறது. அதனுல், அவற்றின் தீயநாற்றமும் கிருமிகளும் பரவாத படி காகம் நமக்கு நன்மை செய்கிறது.

**5. காகத்தால் நமக்கு உண்டாகும் தீமைகள் எவை?**

காகம் தந்திரமுள்ள பறவை. அது குழந்தைகள் வைத்திருக்கும் தின்பண்டங்களை ஏமாற்றித் திருடும். வீட்டில் உலர்த்தும் வற்றல் முதலியவைகளைத் திருடிச் செல்லும். இவை காகத்தால் நமக்கு உண்டாகும் தீமைகள் ஆகும்.

**6. பெட்டைக் காகம் எப்படிக் கூடு கட்டுகிறது ?**

பெட்டைக் காகம் சுள்ளி, சருகு, செத்தைகளால் மரத்தில் கூடு கட்டும். கூட்டில் மெல்லிய புல் முதலிய வற்றைப் பரப்பி வைக்கும். அதில் முட்டை யிடும்.

**7. காகம் தன் குஞ்சுகளை எப்படி வளர்க்கும் ?**

காகத்தின் முட்டை பசுமையும் நீலமும் கலந்த நிறம் உடையது. காகம் தன் முட்டைகளை விழிப்புடன் அடை காக்கும். நாலைந்து நாட்களில் முட்டைகள் பொரிந்து குஞ்சுகள் வெளிவரும். அவற்றைக் காகம் அன்புடன் ஊட்டி வளர்க்கும்.

# 29. வானெலி

## அருஞ்சொற்பொருள்

நொடிப்பொழுது - கட்டை விரலையும் ஆள்காட்டி விரலையும் சேர்த்து நொடிக்கும் நேரம்
புலப்பட்டது - தெரிந்தது
செலுத்து - அனுப்பு
வானெலி நிலையம் - ஒலி பரப்பப்படும் இடம்
உருவாக்கினர் - செய்தார்
இன்புறுகிறேம் - இன்பம் அடைகிறேம்
இன்னிசை - இனிய பாட்டு
அரசினர் - ஆட்சி செய்பவர்
நிகழ்ச்சி - நடைபெறுபவை
வணிகர் - வியாபாரிகள்

## வினு-விடை

**1. வானெலியைக் கண்டுபிடித்தவர் யார் ?**

இத்தாலி நாட்டில் பொலோஞ நகரத்தில் 1874ஆம் ஆண்டில் பிறந்த மார்க்கோனி என்னும் விஞ்ஞானி வானெலியைக் கண்டுபிடித்தார்.

**2. வானொலியை அவர் எப்படிக் கண்டுபிடித்தார்?**

வானவெளி வழியாக மின் அலைகளை நொடிப் பொழுதில் எங்கும் பரவச் செய்யலாம் என்பது அவருக்குப் புலப்பட்டது. அதனால் அவர் வானொலியை உருவாக்கினார்.

**3. வானொலியின் அமைப்பு யாது?**

வானொலியில் முக்கியமானவை இரு கருவிகள். ஒன்று ஒலி பரப்பும் கருவி; மற்றொன்று ஒலி வாங்கும் கருவி. ஒலி பரப்பும் கருவி ஒலியை மின் அலைகளாக மாற்றி வானில் செலுத்துகிறது. அந்த மின் அலைகள் வானவெளி வழியாகப் பல திசைகளில் விரைந்து பரவுகின்றன. ஒலி வாங்கும் கருவி அந்த ஒலியலைகளை இழுத்து நாம் கேட்கச் செய்கிறது.

**4. வானொலியின் நன்மைகள் மூன்றை எழுது.**

(1) வானொலியில் பேச்சு, இன்னிசை, நாடகம் ஆகியவற்றை நாம் கேட்கிறோம். (2) அன்றாடக் கால நிலையை வானொலி மூலம் அறிந்து வானவூர்திகளும் கப்பல்களும் நன்மை அடைகின்றன. (3) வணிகர்கள் அன்றாட விலை விவரங்களை வானொலி மூலம் அறிய முடிகிறது.

## 30 சுந்தரன் எழுதின கடிதம்

### அருஞ்சொற்பொருள்

**வாரம்** - ஞாயிற்றுக்கிழமை முதல் சனிக்கிழமை வரை உள்ள ஏழு நாட்கள்

**கடினம்** - கஷ்டம்

### வினா-விடை

**1. கடிதத் தலைப்பில் வலப்புறம் என்ன எழுத வேண்டும்?**

கடிதத்தின் தலைப்பில் வலப் பக்கத்தில், கடிதம் எழுதுபவர் வாழும் இடத்தை முதலில் குறிப்பிட வேண்டும். அதாவது தம் வீட்டு எண், தெருவின் பெயர், அந்தத் தெரு உள்ள ஊரின் பெயர், கடிதம் எழுதும் தேதி ஆகியவற்றை எழுதவேண்டும்.

**2. கடிதத்தை எப்படித் தொடங்கி எப்படி முடிக்க வேண்டும்?**

கடிதத்தில் நாம் தெரிவிக்க விரும்பும் செய்தியை எழுதத் தொடங்கு முன், வெளியாராக இருந்தால், அன்

புள்ள ஐயா என்று எழுதவேண்டும். உறவினரா யிருந்தால், அன்புள்ள அப்பா, அன்புள்ள மாமா, அன்புள்ள அம்மா என்று அந்தந்த உறவு முறையைக் குறித்து எழுத வேண்டும். செய்தி எழுதத் தொடங்கு முன் வணக்கம் என்னும் மரியாதைச் சொல்லைக் குறிக்க வேண்டும். முடிக்கும் போது 'உங்கள் அன்புள்ள......' என்று எழுதி அதன் கீழ்க் கையெழுத்திட வேண்டும்.

**3. நீ தேர்வில் வெற்றியடைந்ததைப் பற்றி உன் தந்தையாருக்கு ஒரு கடிதம் எழுது.**

10, செங்குட்டுவன் தெரு,
கிண்டி, சென்னை–32
25—4—'68.

அன்புள்ள அப்பா,

வணக்கம். நாங்கள் இங்கு நலம். உங்கள் நலத்தை அறிய விரும்புகிறேன். நான் தேர்வில் வெற்றிபெற்று விட்டேன். என் வெற்றி கேட்டு இங்கு மாமாவும் மாமியும் மகிழ்ச்சி அடைந்தார்கள். புதிய புத்தகங்கள் வாங்கவும், சிறப்புச் சம்பளம் கட்டவும் பணம் அனுப்பிவைக்க வேண்டுகிறேன்.

உங்கள் அன்புள்ள மகன்
**பு. செ. திருமாவளவன்**

முகவரி :
**திரு. பு. செல்வக்கோ,**
**30, மேட்டுத் தெரு,**
**செம்பாக்கம், செங்கற்பட்டு மாவட்டம்.**

# செய்யுட் பாடம்

## I. வெற்றி வேற்கை

இந்நூலை எழுதியவர் **அதிவீரராம பாண்டியர்.** இவர் ஒரு சிற்றரசர். பாண்டிய நாட்டைச் சேர்ந்த கொற்கை என்னும் இடத்தை இவர் ஆண்டார். இவர் ஏறத்தாழ 400 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்தார். இந் நூலுக்கு நறுந்தொகை என்னும் பெயரும் உண்டு.

**எழுத்து அறிவித்தவன் இறைவன் ஆகும் (1)**

சொற்பொருள்

| | |
|---|---|
| எழுத்து - நூல்களை | இறைவன் ஆகும் - கடவுள் ஆவார் |
| அறிவித்தவன் - கற்பித்தவர் | |

(கருத்துரை) கல்வி கற்றுக் கொடுத்த ஆசிரியர் கடவுள் ஆவார்.

**கல்விக்கு அழகு கசடுஅற மொழிதல் (2)**

சொற்பொருள்

| | |
|---|---|
| கல்விக்கு - ஒருவன் படித்த படிப்புக்கு | கசடு அற - குற்றம் இல்லாமல் |
| அழகு - அழகாவது | மொழிதல் - பேசுவது ஆகும் |

(க - ரை.) கல்வி கற்றதற்கு அழகாவது குற்றம் இல்லாமல் பேசுவது ஆகும்.

**செல்வர்க்கு அழகு செழுங்கிளை தாங்குதல் (3)**

சொற்பொருள்

| | |
|---|---|
| செல்வர்க்கு - பணக்காரருக்கு | செழுங்கிளை - நெருங்கிய உறவினர்களை |
| அழகு - அழகாவது | தாங்குதல் - காப்பாற்றுதல் |

(க - ரை.) தங்கள் நெருங்கிய உறவினர்களைக் காப்பாற்றுவதே பணக்காரர்களுக்கு அழகாகும்.

**உண்டிக்கு அழகு விருந்தோடு உண்டல் (4)**

சொற்பொருள்

| | |
|---|---|
| உண்டிக்கு அழகு - சாப்பாட்டுக்கு அழகாவது | விருந்தோடு - விருந்தினரோடு |
| | உண்டல் - சாப்பிடுவதாம் |

(க - ரை.) விருந்தாளிகளுடன் உட்கார்ந்து சாப்பிடுவதே சாப்பாட்டுக்கு அழகு ஆகும்.

**அறிவோர்க்கு அழகு கற்றுணர்ந்து அடங்கல் (5)**

சொற்பொருள்

| | |
|---|---|
| அறிவோர்க்கு - அறிவு உள்ளவர்களுக்கு | கற்று உணர்ந்து - நல்ல நூல்களை நன்றாகப் படித்து |
| அழகு - அழகாவது | அடங்கல் - அடங்கி இருத்தல் |

(க - ரை.) நல்ல நூல்களை நன்றாகப் படித்து அறிந்து அடக்கமாக இருப்பதே அறிவுள்ளவர்களுக்கு அழகு.

**பெரியோர் எல்லாம் பெரியரும் அல்லர் ;**
**சிறியோர் எல்லாம் சிறியரும் அல்லர். (6)**

சொற்பொருள்

பெரியோர் எல்லாம் - உருவத்தால் பெரியவர் எல்லாரும்
பெரியரும் அல்லர் - (அறிவினல்) பெரியவர் ஆகமாட்டார்
சிறியோர் எல்லாம் - உருவத்தால் சிறியவர் எல்லாரும்
சிறியரும் அல்லர் - (அறிவினல்) சிறியவர் ஆகமாட்டார்

(க - ரை.) அறிவினல் பெரியவரே பெரியவர் ஆவார். அறிவினல் சிறியவரே சிறியவர் ஆவார். ஒருவரை உருவத்தால் மதிப்பிடல் கூடாது.

**பெற்றோர் எல்லாம் பிள்ளைகள் அல்லர்**
**உற்றோர் எல்லாம் உறவினர் அல்லர்** (7)

சொற்பொருள்

பெற்றோர் எல்லாம் - (ஒருவன்) பெற்ற பிள்ளைகள் எல்லாரும்
பிள்ளைகள் அல்லர் - அறிவுள்ள பிள்ளைகள் ஆகமாட்டார்
உற்றோர் எல்லாம் - உறவினர்கள் எல்லாரும்
உறவினர் அல்லர் - (உண்மையான) உறவினர் ஆகார்

(க - ரை.) பிறந்த பிள்ளைகள் எல்லாம் அறிவுள்ள பிள்ளைகள் ஆகிவிட முடியாது. எல்லா உறவினர்களும் உண்மையான உறவினர்கள் ஆகிவிட முடியாது. அறிவுள்ள பிள்ளைகளும் உண்மையான உறவினர்களும் ஒருவனுக்கு அமைவது அருமை.

**பெருமையும் சிறுமையும் தான்தர வருமே** (8)

சொற்பொருள்

பெருமையும் சிறுமையும் - உயர்வும் தாழ்வும்
தான்தர - தன் நடத்தையினல்
வரும் - உண்டாகும்

(க - ரை.) உயர்வும் தாழ்வும் அவரவர் நடத்தைக்கு ஏற்றபடியே உண்டாகும்.

**கற்கை நன்றே கற்கை நன்றே**
**பிச்சை புகினும் கற்கை நன்றே** (9)

சொற்பொருள்

கற்கை நன்றே - கல்வி கற்பது நல்லது
கற்கை நன்றே - கல்வி கற்பது (மிகவும்) நல்லது
பிச்சை புகினும் - பிச்சை எடுத்தாலும்
கற்கை நன்றே - கல்வி கற்பது (மிகவும்) நல்லது

(க–ரை.) பிச்சை எடுத்தாலும் கல்வி கற்றுக்கொள் வது மிகவும் நல்லது.

**எக்குடிப் பிறப்பினும், யாவரே ஆயினும்**
**அக்குடிக் கற்றோரை 'மேல்வருக!' என்பர் (10)**

சொற்பொருள்

| | |
|---|---|
| **எக்குடி** - எந்தக்குலத்தில் | **அக்குடி** - அந்தக் குலத்தில் |
| **பிறப்பினும்** - (ஒருவர்) பிறந் தாலும் | **கற்றோரை** - படித்தவரை |
| **யாவரே ஆயினும்** - எவராக இருந்தாலும் | **மேல்** - மேல் இடத்துக்கு |
| | **வருக என்பர்** - வாருங்கள் என்று அழைப்பார்கள் |

(க–ரை.) எந்தக் குலத்தில் பிறந்திருந்தாலும், எவராக இருந்தாலும், படித்தவர்களுக்கே பெருமை உண்டாகும்.

**அறிவுடை ஒருவனை அரசனும் விரும்பும் (11)**

சொற்பொருள்

| | |
|---|---|
| **அறிவுடை** - கல்வி அறிவுடைய | **அரசனும் விரும்பும்** - மன்ன னும் விரும்புவான் |
| **ஒருவனை** - ஒருவனை | |

(க–ரை.) கல்வி அறிவு உள்ள ஒருவனையே அரசனும் விரும்புவான்.

**அச்சமும் நாணமும் அறிவிலோர்க்கு இல்லை (12)**

சொற்பொருள்

| | |
|---|---|
| **அச்சமும் நாணமும்** - பயமும் வெட்கமும் | **அறிவிலோர்க்கு இல்லை**-அறிவு இல்லாதவர்க்கு இல்லை |

(க–ரை.) பழிபாவங்களுக்குப் பயப்படுவதும், தகாத வேலைகளைச் செய்வதற்கு வெட்கப்படுவதும் அறிவு இல்லாதவர்களுக்கு இல்லை.

**கேளும் கிளையும் கெட்டோர்க்கு இல்லை (13)**

சொற்பொருள்

| | |
|---|---|
| **கேளும்** - நண்பர்களும் | **கெட்டோர்க்கு** - வறுமையால் வாடுபவர்களுக்கு |
| **கிளையும்** - உறவினர்களும் | **இல்லை** - இல்லையாம் |

(க-ரை.) வறுமையால் வாடுபவர்களுக்கு நண்பரும் இல்லை, உறவினரும் இல்லை.

**உடைமையும் வறுமையும் ஒருவழி நில்லா (14)**

சொற்பொருள்

| | |
|---|---|
| உடைமையும் வறுமையும் - செல்வமும் தரித்திரமும் | ஒருவழி - ஓர் இடத்திலேயே |
| | நில்லா - நிலைத்து நிற்கமாட்டா |

க-ரை.) செல்வமும் வறுமையும் ஓரிடத்தில் நிலைத்து நிற்காமல் மாறிமாறி வரும்.

**வித்தும் ஏரும் உளவாய் இருப்ப**
**எய்த்துஅங்கு இருக்கும் ஏழையும் பதரே (15)**

சொற்பொருள்

| | |
|---|---|
| வித்தும் ஏரும் - விதையும் உழுவதற்கு ஏரும் | எய்த்து இருக்கும் - சோம்பல் அடைந்து இருக்கும் |
| உளவாய் இருப்ப - தன்னிடம் இருக்க | ஏழையும் - அறிவு இல்லாதவனும் |
| அங்கு - அவ்விடத்தில் | பதரே - பதரே ஆவான் |

(க-ரை.) விதையும், உழுவதற்கு ஏரும் தன்னிடத்தில் இருக்கும்போது, உழுது பயிர் செய்யாமல் சோம்பேறியாய் இருப்பவன் பதரே ஆவான்.

**தன்ஆ யுதமும் தன்கையிற் பொருளும்**
**பிறன்கையிற் கொடுக்கும் பேதையும் பதரே (16)**

சொற்பொருள்

| | |
|---|---|
| தன் ஆயுதமும்-தன் வேலைக்கு வேண்டிய கருவிகளையும் | கொடுக்கும் - கொடுத்து வைக்கும் |
| தன்கையில் - தன் கையில் உள்ள | பேதையும் - அறிவு இல்லாதவனும் |
| பொருளும் - செல்வத்தையும் | பதரே - பதரே ஆவான் |
| பிறன் கையில் - மற்றவரிடம் | |

(க-ரை.) தன்னுடைய கருவிகளையும் தன் கையிலுள்ள செல்வத்தையும் பிறரிடம் கொடுத்துவைக்கும் அறிவில்லாதவனும் பதரே ஆவான்.

**துணையோடு அல்லது நெடுவழி போகேல் (17)**

### சொற்பொருள்

| | |
|---|---|
| துணையோடு - தகுந்த துணை | நெடுவழி போகேல் - நீண்ட |
| அல்லது - இல்லாமல் | தொலைவு போகாதே |

(க-ரை.) தகுந்த துணை இல்லாமல் தொலைவிலுள்ள இடத்திற்குப் போகக்கூடாது.

## வினாவும்-விடையும்

**1. எவர் கடவுள் ?**

கல்வி கற்றுக் கொடுத்த ஆசிரியர் கடவுள் ஆவார்.

**2. கல்விக்கு அழகு எது ?**

குற்றம் இல்லாமல் பேசுவதே கல்விக்கு அழகாகும்.

**3. செல்வர்க்கு அழகு எது ?**

வறுமையால் வாடுகின்ற தங்கள் நெருங்கிய உறவினரைப் பாதுகாத்தல் செல்வர்க்கு அழகாகும்.

**4. உண்டிக்கு அழகு எது ?**

விருந்தாளிகளுடன் உட்கார்ந்து உண்பதே உண்டிக்கு அழகாகும்.

**5. அறிவோர்க்கு அழகு எது ?**

நல்ல நூல்களைப் படித்து அறிந்து, அடக்கத்துடன் இருப்பதே அறிவோர்க்கு அழகாகும்.

**6. எவர் பெரியவர் அல்லர் ? எவர் சிறியவர் அல்லர் ?**

உருவத்தால் பெரியவராக இருப்பவர் எல்லாரும் பெரியவர் ஆகமாட்டார். உருவத்தால் சிறியவராக இருப்பவர் சிறியவர் ஆகமாட்டார்.

**7. எவர் பிள்ளைகளாகார்? எவர் உறவினராகார் ?**

அறிவுள்ள பிள்ளைகளே பிள்ளைகள் ஆவார். துன்பத்தில் உதவி செய்பவரே உறவினர் ஆவார். பெற்ற பிள்ளைகள் எல்லாம் அறிவுள்ள பிள்ளைகள் ஆக மாட்டார். உறவினர் எல்லாரும் உண்மை உறவினர் ஆக மாட்டார்.

**8. ஒருவருக்குப் பெருமையும் சிறுமையும் எவ்வாறு உண்டாகும் ?**

ஒருவர் பெருமை அடைவதற்கும் சிறுமை அடைவதற்கும் அவரவர் நடத்தையே காரணமாகும்.

**9. பிச்சை புகினும் செய்யவேண்டுவது என்ன ?**

ஒருவர் பிச்சை எடுத்தாலும் கல்வி கற்றுக்கொள்ள வேண்டும்.

**10. 'மேல்வருக' என்று எவரை அழைப்பர் ?**

எந்தக் குலத்தில் பிறந்தவராயிருந்தாலும், எவராக இருந்தாலும், படித்தவர்களையே உலக மக்கள் மேல் வருக என்று அழைத்துப் பெருமைப்படுத்துவார்கள்.

**11. எவரை அரசனும் விரும்புவான் ?**

கல்வியைச் சிறப்பாகக் கற்ற ஒருவனையே அரசனும் விரும்புவான்.

**12. அறிவு இல்லாதவருக்கு எவை இல்லை ?**

அறிவு இல்லாதவருக்குப் பழிபாவங்கள் செய்வதற்குப் பயமும், தகாத வேலைகளைச் செய்வதற்கு வெட்கமும் இல்லை.

**13. கெட்டோர்க்கு எவர் இல்லை ?**

வறுமையால் வாடிக் கெட்டோர்க்கு நண்பரும் இல்லை; உறவினரும் இல்லை.

**14. ஓரிடத்தில் நிலைத்து நிற்காமல் மாறி மாறி வருபவை எவை ?**

செல்வமும் வறுமையும் ஓரிடத்தில் நிலையாக நிலைத்து நிற்கமாட்டா. அவை மாறிமாறி வருபவை ஆகும்.

**15. எவன் பதர் ஆவான் ?**

விதையும், உழுவதற்கு ஏரும் தன்னிடம் இருக்க, உழுது பயிர் செய்யாமல் சோம்பேறியாய் இருப்பவன் பதர் ஆவான்.

**16. பிறர் கையில் கொடுக்கக் கூடாதவை எவை ?**

தன் கையில் உள்ள தன் தொழிலுக்கு வேண்டிய கருவிகளையும் பொருளையும் பிறரிடம் கொடுக்கக்கூடாது. அப்படிக் கொடுப்பவன் அறிவு இல்லாதவன். அவன் பதருக்குச் சமம் ஆவான்.

**17. நீண்ட தொலை எப்படிப் போகவேண்டும் ?**

நீண்ட தொலை செல்லும்போது, தக்க துணையோடு தான் போகவேண்டும்.

## II. மூதுரை

இந்த நூலுக்கு வாக்குண்டாம் என்னும் வேறு பெயரும் உண்டு. இதனை எழுதியவர் ஔவையார் என்னும் பெரும் தமிழ்ப் புலவர் ஆவார். இந்த அம்மையார் ஆத்தி சூடி, கொன்றைவேந்தன் முதலிய வேறு நூல்களையும் குழந்தைகளுக்காக எழுதியுள்ளார். மூதுரை என்பது பழைய நீதிகளைக்கொண்ட நூல் எனப் பொருள்படும்.

**நன்றி ஒருவற்குச் செய்தக்கால், 'அந்நன்றி**
**என்று தருங்கொல்'! எனவேண்டா—நின்று**
**தளரா வளர்தெங்கு தாள்உண்ட நீரைத்**
**தலையாலே தான்தருத லால்.** (1)

சொற்பொருள்

நின்று - நிலைபெற்று
தளரா - தளர்ச்சி அடையாமல்
வளர் தெங்கு - வளர்கின்ற தென்னை மரமானது
தாள் உண்ட - தன் வேர்களினால் குடித்த
நீரை - தண்ணீரை
தலையாலே - தன் உச்சியினால்
தான் தருதலால் - இனிய இளநீர் ஆக்கித் தருவதால்

ஒருவற்கு - நல்ல குணம் உள்ள ஒருவனுக்கு
நன்றி செய்தக்கால் - உதவி செய்தால்
அந்நன்றி - அந்த உதவியை
என்று தருங்கொல் - எப்பொழுது செய்வானோ
என வேண்டா - என்று நினைக்க வேண்டாம்

(கருத்துரை) நாம் நல்லவர் ஒருவருக்கு உதவி செய்தால், அவர் தாமே தகுந்த சமயத்தில் சிறந்த உதவியை நமக்குச் செய்வார்.

**கான மயிலாடக் கண்டிருந்த வான்கோழி**
**தானும் அதுவாகப் பாவித்துத்—தானுந்தன்**
**பொல்லாச் சிறகைவிரித் தாடினாற் போலுமே**
**கல்லாதான் கற்ற கவி.** (2)

சொற்பொருள்

கல்லாதான் - கற்கவேண்டிய நூல்களை முறையாகப் படியாதவன்
கற்ற கவி - ஆசிரியரில்லாமல் தானே கற்றுக்கொண்ட செய்யுளானது

கானம் மயில் ஆட - காட்டில் மயில் தன் அழகிய சிறகை விரித்து ஆடுவதை
கண்டு இருந்த - பார்த்துக் கொண்டு இருந்த
வான்கோழி - வான்கோழி

தானும் அதுவாக - தன்னையும் அந்த மயிலாக
பாவித்து - எண்ணிக்கொண்டு
தானும் தன் - தானும் தன்னுடைய
பொல்லா - அழகு இல்லாத
சிறகை விரித்து - சிறகுகளை விரித்துக்கொண்டு
ஆடினற்போலும் - ஆடுவதைப் போலாகும்.

(க - ரை.) முறையாகக் கல்வி கற்றுக்கொள்ளாத ஒருவன், கற்றவனைப்போல நடித்தாலும் கற்றவன் ஆகி விடமாட்டான்.

**நல்லாரைக் காண்பதுவும் நன்றே ;—நலமிக்க**
**நல்லார்சொல் கேட்ப துவும்நன்றே—நல்லார்**
**குணங்கள் உரைப்பதுவும் நன்றே ; அவரோடு**
**இணங்கி இருப்பதுவும் நன்று. (3)**

சொற்பொருள்

நல்லாரை - நல்ல குணம் உள்ள பெரியோர்களை
காண்பதுவும் நன்று - பார்ப்பதும் நல்லது
நலம் மிக்க - நன்மை மிகுந்த
நல்லார் சொல் - நல்லவர்களுடைய சொற்களை
கேட்பதுவும் நன்று - கேட்டலும் நல்லது
நல்லார் - நல்லவர்களுடைய
குணங்கள் - நல்ல குணங்களை
உரைப்பதுவும் நன்று - புகழ்ந்து பேசுவதும் நல்லது
அவரோடு - அந்த நல்லவர்களுடன்
இணங்கி இருப்பதுவும் - சேர்ந்து இருப்பதுவும்
நன்று - நல்லது

(க - ரை.) நல்லவர்களைப் பார்ப்பதும், அவர்களுடைய சொற்களைக் கேட்பதும், அவர்களுடைய குணங்களைப் புகழ்ந்து பேசுவதும், அவர்களுடன் கூடி இருப்பதும் நன்மையைத் தருவதாகும்.

**நெல்லுக்கு இறைத்தநீர் வாய்க்கால் வழியோடிப்**
**புல்லுக்கும் ஆங்கே பொசியுமாம் ;—தொல்லுலகில்**
**நல்லார் ஒருவர் உளரேல், அவர்பொருட்டு**
**எல்லார்க்கும் பெய்யும் மழை. (4)**

சொற்பொருள்

நெல்லுக்கு - நெல் பயிருக்கு
இறைத்த நீர் - இறைக்கப்பட்ட தண்ணீர்
வாய்க்கால் வழி ஓடி - வாய்க்காலின் வழியாக ஓடி
ஆங்கு - அவ்விடத்தில் உள்ள

புல்லுக்கும் - புல்களுக்கும்
பொசியுமாம் - கசிந்து ஊறும்
தொல் உலகில் - பழைமை யான இந்த உலகத்தில்
நல்லார் ஒருவர் உளரேல் - நல்லவர் ஒருவர் இருந்தால்
அவர் பொருட்டு - அந்த நல்ல வருக்காக
எல்லார்க்கும் - அனைவருக்கும்
மழை பெய்யும் - மழையானது பெய்கிறது

(க - ரை.) இந்த உலகில் நல்லவர் ஒருவர் இருந்தால், அவரால் உலகில் உள்ள எல்லோரும் பயன் அடைவார்கள்.

**மடல்பெரிது தாழை ; மகிழ்இனிது கந்தம் ;**
**உடல்சிறியர் என்றிருக்க வேண்டா—கடல்பெரிது ;**
**மண்ணீரும் ஆகாது ; அதன்அருகே சிற்றூறல்**
**உண்ணீரும் ஆகி விடும்.** (5)

சொற்பொருள்

தாழை - தாழம் பூவின்
மடல் பெரிது - இதழ்கள் பெரியவை
மகிழ் - மகிழம் பூவின் (இதழ்கள் சிறியவை ஆனாலும்)
கந்தம் இனிது - மணத்தில் (தாழம்பூவைவிட) இனியது
கடல் பெரிது - (நீர் நிறைந்த) கடலானது பெரியதாக இருந்தாலும்
மண் நீரும் ஆகாது - அத்தண்ணீர் கழுவுவதற்கும் உதவாது
அதன் அருகே - அந்தக் கடலின் பக்கத்தில் இருக்கும்
சிறு ஊறல் - சிறிய ஊற்று நீர்
உண் நீரும் - குடிப்பதற்குத் தகுந்த தண்ணீராகவும்
ஆகிவிடும் - ஆகும் (அதனால்)
உடல் சிறியார் என்று - ஒருவரை உருவத்தால் சிறியவர் என்று
இருக்கவேண்டா - மதியாமல் இருக்கக்கூடாது.

(க - ரை.) ஒருவரை உருவத்தைக்கொண்டு பெரியவர் சிறியவர் என்று எண்ணக்கூடாது. உருவத்தால் பெரியவர் குணத்தால் சிறியவராக இருப்பது உண்டு. உருவத்தால் சிறியவர் குணத்தால் பெரியவராக இருப்பதும் உண்டு. எனவே, அவரவர் குணங்களைக்கொண்டே அவரவரை மதிப்பிடவேண்டும்.

**கவையாகிக் கொம்பாகிக் காட்டகத்தே நிற்கும்**
**அவையல்ல நல்ல மரங்கள் ;—சவைநடுவே**
**நீட்டோலை வாசியா நின்றான் குறிப்பறிய**
**மாட்டா தவன்நன் மரம்.** (6)

சொற்பொருள்

கவை ஆகி - கிளைகளை உடையன ஆகியும்
கொம்பு ஆகி - கொம்புகளை உடையன ஆகியும்
காட்டு அகத்தே நிற்கும் - காட்டிலே நிலைத்து நிற்கும்
அவை - அந்த மரங்கள்
நல்ல மரங்கள் அல்ல - சிறந்த மரங்கள் ஆகா
சவை நடுவே - கற்றவர்கள் உள்ள சபையின் நடுவில்
நீட்டு ஓலை - கொடுத்த ஓலையை
வாசியா நின்றான் - படிக்க முடியாமல் நின்றவனும்
குறிப்பு - பிறர் கருத்தை
அறியமாட்டாதவன் - தெரிந்து கொள்ள முடியாதவனும்
நல்மரம் - நல்ல மரங்கள் ஆவர்

(க - ரை.) படிக்காதவனும், பிறர் குறிப்பை அறிய முடியாதவனும் மனிதனாக இருந்தாலும் நல்ல மரத்துக்கே ஒப்பாவான்.

'அடக்கம் உடையார் அறிவிலர்' என் றெண்ணிக்
கடக்கக் கருதவும் வேண்டா ;—மடைத்தலையில்
ஓடுமீன் ஓட உறுமீன் வருமளவும்
வாடி இருக்குமாம் கொக்கு. (7)

சொற்பொருள்

கொக்கு - கொக்கானது
மடைத்தலையில் - தண்ணீர் ஓடிவரும் மடையில்
ஓடும் மீன் - பாய்ந்து ஓடும் சிறு மீன்கள்
ஓட - ஓடிக்கொண்டிருக்க
உறுமீன் - (தன் இறைக்குத் தகுந்த) பெரிய மீன்
வரும் அளவும் - வரும் வரையிலும்
வாடி இருக்கும் - சோர்ந்து இருக்கும் (ஆகையால்)
அடக்கம் உடையவர் - அடக்கமாக இருப்பவர்களை
அறிவு இலர் என்று - அறிவு இல்லாதவர் என்று
எண்ணி - நினைத்து
கடக்க - (அவரை) வெல்ல
கருதவும் வேண்டா - நினைக்கவும் கூடாது.

(க - ரை.) அடக்கமாக இருக்கும் அறிஞர்களை அறிவு இல்லாதவர்கள் என்று நினைத்து அவர்களை வெல்வதற்கு நினைக்கவும் கூடாது.

அற்ற குளத்தின் அறுநீர்ப் பறவைபோல்
உற்றுழித் தீர்வார் உறவுஅல்லர் ;—அக்குளத்தில்
கொட்டியும் ஆம்பலும் நெய்தலும் போலவே
ஒட்டி உறுவார் உறவு. (8)

சொற்பொருள்

| | |
|---|---|
| **அற்ற குளத்தின்** - நீர் வற்றிய குளத்திலிருந்து | அந்தக் குளத்தில் கொட்டிப் பூண்டும் |
| **அறு நீர்ப்பறவைபோல்** - நீங்கும் நீரில் வாழும் பறவைகளைப் போல் | **ஆம்பலும்** - ஆம்பல் கொடியும் |
| **உற்றுழி** - துன்ப காலத்தில் | **நெய்தலும் போல** - நெய்தல் கொடியும் போல |
| **தீர்வார்** - நீங்கிப் போகிறவர் | **ஒட்டி உறுவார்** - சேர்ந்திருந்து இன்பதுன்பங்களை அனுபவிப்பவரே |
| **உறவு அல்லர்** - நல்ல உறவினர் ஆகமாட்டார் | **உறவு** - (உண்மையான) உறவினர் ஆவர் |
| **அக்குளத்தில் கொட்டியும்** - | |

(**க - ரை.**) துன்ப காலத்திலும் விட்டுப் பிரியாமல் சேர்ந்திருந்து இன்ப துன்பங்களை அனுபவிப்பவரே உண்மையான உறவினர் ஆவார்.

**'உடன்பிறந்தார் சுற்றத்தார்' என்றிருக்க வேண்டா ;**
**உடன்பிறந்தே கொல்லும் வியாதி ;—உடன்பிறவா**
**மாமலையில் உள்ள மருந்தே பிணிதீர்க்கும் ;**
**ஆமருந்து போல்வாரும் உண்டு.** (9)

சொற்பொருள்

| | |
|---|---|
| **வியாதி** - நோயானது | **உடன் பிறவா** - நம்முடன் கூடப் பிறக்காத |
| **உடன் பிறந்தே** - நம் உடம்போடு கூடப்பிறந்தே | **மாமலையில் உள்ள** - பெரிய மலையில் இருக்கிற |
| **கொல்லும்** - கொன்றுவிடும் (ஆதலால்) | **மருந்தே** - மருந்துகளே |
| **உடன் பிறந்தார்** - நம்முடன் கூடப் பிறந்தவர் எல்லாரும் | **பிணி தீர்க்கும்** - நோயைப் போக்கும் |
| **சுற்றத்தார் என்று** - உறவினர் என்று | **ஆ மருந்து** - அந்த மருந்தை |
| **இருக்கவேண்டா** - நினைத்தல் கூடாது | **போல்வாரும்** - போன்ற அயலார்களும் |
| | **உண்டு** - இருக்கின்றனர் |

(**க - ரை.**) நம்முடன் பிறந்தே நமக்குத் தீமை செய்பவரும் உண்டு. நம்மோடு பிறக்காமல், நமக்கு வரும் துன்பத்தைப் போக்கி நன்மை செய்பவர்களும் உண்டு.

**கற்பிளவோடு ஒப்பர் கயவர் ;—கடுஞ்சினத்துப்**
**பொற்பிளவோடு ஒப்பாரும் போல்வாரே;—விற்பிடித்து**
**நீர்கிழிய எய்த வடுப்போல மாறுமே**
**சீர்ஒழுகு சான்றோர் சினம்.** (10)

### சொற்பொருள்

கயவர் - கீழ்மக்கள்
கடுஞ்சினத்து - மிகுந்த கோபத்தால் வேறுபட்டால்
கல்பிளவோடு ஒப்பர் -கல்லின் பிளவுக்கு ஒப்பாவர்
பொன் பிளவோடு-பொன்னின் பிளவுக்கு
ஒப்பாரும் - ஒப்பானவர்களும்
போல்வாரே - அவர்களுக்குச் சமமானவரே
சீர் ஒழுகு - சிறந்த வழியில் நடக்கும்
சான்ரேர் சினம் - பெரியவர்களுடைய கோபம்
வில்பிடித்து - வில்லைப் பிடித்து
நீர் கிழிய - தண்ணீர் இருபிளவாகக் கிழியும்படி
எய்த - அம்பிஞல் அடித்த
வடுப் போல - பிளவைப் போல
மாறும் - உடனே நீங்கிவிடும்

(க - ரை.) கீழ்மக்கள், கோபம்கொண்டு பிரிந்தால் மறுபடியும் ஒன்று சேரமாட்டார்கள். இடைமக்கள், ஒருவர் நடுவில் நின்று கூட்டி வைத்தால் ஒன்ருகக் கூடிவிடுவார்கள். தலைமக்களாகிய பெரியோர்கள் கோபத்தால் பிரிந்துவிட்டால், உடனே ஒன்ருகக் கூடிக் கொள்வார்கள்.

**நற்ரு மரைக்கயத்தில் நல்லன்னம் சேர்ந்தாற்போல்**
**கற்ருரைக் கற்ருரே காமுறுவர் ;—கற்பில்லா**
**மூர்க்கரை மூர்க்கர் முகப்பர் ; முதுகாட்டில்**
**காக்கை உகக்கும் பிணம். (11)**

### சொற்பொருள்

நல் தாமரைக்கயத்தில் - நல்ல தாமரைமலர்கள் உள்ள குளத்தில்
நல் அன்னம் - நல்ல அன்னப் பறவைகள்
சேர்ந்தாற்போல் - சேர்ந்து இருப்பதைப் போல்
கற்ருரை - கற்றறிந்த பெரியோரை
கற்ருரே - கற்றறிந்த பெரியோரே
காமுறுவர் - விரும்பிச் சேர்வர்
முதுகாட்டில் - சுடுகாட்டில்
பிணம் - பிணத்தை
காக்கை உகக்கும் - காக்கை விரும்பும். அது போல
கற்பு இலா மூர்க்கரை - கல்வி இல்லாத மூடரை
மூர்க்கர் - கல்வி இல்லாத மூடரே
முகப்பர் - விரும்பிச் சேர்வர்

(க - ரை.) கற்றறிந்த பெரியோர்களைக் கல்வி அறிவு உடையவர்களே விரும்பிச் சேர்வார்கள். கல்வி அறிவு இல்லாத மூடர்களை மூடர்களே விரும்பிச் சேர்வார்கள்.

**நஞ்சுடைமை தானறிந்து நாகம் கரந்துறையும்**
**அஞ்சாப் புறங்கிடக்கும் நீர்ப்பாம்பு ;—நெஞ்சில்**
**கரவுடையார் தம்மைக் கரப்பர் ; கரவார்**
**கரவிலா நெஞ்சத் தவர்.** **(12)**

சொற்பொருள்

**நாகம்** - நல்ல பாம்பானது
**தான் நஞ்சு உடைமை அறிந்து** - தன்னிடம் விஷம் இருப்பதைத் தெரிந்து
**கரந்து உறையும்** - மறைந்து வசிக்கும்
**நீர்ப்பாம்பு** - தண்ணீர்ப் பாம்பானது (தன்னிடம் விஷம் இல்லாமையால் பயப்படாமல்)
**புறம் கிடைக்கும்** - வெளியே கிடக்கும் (அவைபோல)
**நெஞ்சில்** - மனத்தில்
**கரவு உடையார்** - வஞ்சனை உடையவர்கள்
**தம்மை கரப்பர்** - தங்களை மறைத்து வாழ்வார்கள்
**கரவு இலா**-வஞ்சனை இல்லாத
**நெஞ்சத்தவர்** - மனம் உடையவர்கள்
**கரவார்** - மறைந்து வாழமாட்டார்கள்

(க - ரை.) வஞ்சனை உடையவர்கள் மறைந்து வாழ விரும்புவார்கள். வஞ்சனை இல்லாத மனம் உடைய பெரியோர் எவருக்கும் அஞ்சாமல் வெளிப்படையாக வாழ்வார்கள்.

**மன்னனும் மாசறக் கற்றோனும் சீர்தூக்கின்**
**மன்னனில் கற்றோன் சிறப்புடையன் ;—மன்னற்குத்**
**தன்தேசம் அல்லால் சிறப்பில்லை ; கற்றோற்குச்**
**சென்றஇட மெல்லாம் சிறப்பு.** **(13)**

சொற்பொருள்

**மன்னனும்** - அரசனையும்
**மாசு அற** - குற்றம் இல்லாமல்
**கற்றோனும்**-படித்த அறிஞனையும்
**சீர்தூக்கின்** - ஆராய்ந்தால்
**மன்னனில்** - அரசனைவிட
**கற்றோன்** - படித்த அறிஞன்
**சிறப்பு உடையன்** - பெருமை உடையவன் ஆவான்
**மன்னற்கு** - அரசனுக்கு
**தன் தேசம் அல்லால்** - தன் நாட்டில் அல்லாமல்
**சிறப்பு இல்லை** - பெருமை இல்லை
**கற்றோற்கு** - படித்த அறிஞனுக்கு
**சென்ற இடம் எல்லாம்** - அவன் செல்லும் இடங்களில் எல்லாம்
**சிறப்பு** - பெருமை உண்டாகும்

(க - ரை.) அரசனையும் பிழையறப்படித்த அறிஞனையும் ஆராய்ந்து பார்த்தால், அரசனைவிடப் படித்த அறிஞனே பெருமை உடையவன் ஆவான்.

**அட்டாலும் பால்சுவையிற் குன்றாது ; அளவளாய்**
**நட்டாலும் நண்பல்லார் நண்பல்லர் ;**
**கெட்டாலும் மேன்மக்கள் மேன்மக்க ளே; சங்கு**
**சுட்டாலும் வெண்மை தரும். (14)**

சொற்பொருள்

பால் - பாலை
அட்டாலும் - (வற்றிப் போகும் படி) காய்ச்சினாலும்
சுவையில் - இனிய சுவையில்
குன்றாது - குறையாது
சங்கு - சங்கினை
சுட்டாலும்-நெருப்பில் இட்டுச் சுட்டாலும்
வெண்மை தரும் - தனக்குரிய வெண்மை நிறத்தையே காட்டும் (அவை போல)
மேன்மக்கள் - பெரியோர்கள்
கெட்டாலும் - வறுமை அடைந்தாலும்
மேன்மக்கள் - பெரியோர்களாகவே விளங்குவர்
நண்புஅல்லார் - நட்புக்குணம் இல்லாதவர்கள்
அளவளாய் - மிகவும் நெருங்கி
நட்டாலும்-நட்புச் செய்தாலும்
நண்பு அல்லார் - நண்பர் ஆக மாட்டார்கள்

(க - ரை.) மேன்மக்கள் வறுமை அடைந்தாலும் உயர்ந்த குணம் உடையவர்களாகவே விளங்குவார்கள். பல நாட்கள் நெருங்கிப் பழகினாலும் கீழோர் நண்பர் ஆகமாட்டார்கள்.

**சாந்தனையும் தீயனவே செய்திடினும் தாம்அவரை**
**ஆந்தனையும் காப்பர் அறிவுடையோர் ;—மாந்தர்**
**குறைக்குந் தனையும் குளிர்நிழலைத் தந்து**
**மறைக்குமாம் கண்டீர் மரம். (15)**

சொற்பொருள்

மரம் - மரமானது
மாந்தர் குறைக்கும் தனையும்- மனிதர்கள் தன்னை வெட்டிச் சாய்க்கும் வரையில்
குளிர்நிழலை - குளிர்ந்த நிழலை
தந்து - (அவர்களுக்குக்) கொடுத்து
மறைக்கும் - வெயிலை மறைக்கும் (அதுபோல)
அறிவு உடையோர் - அறிவில் சிறந்த பெரியோர்
சாம்தனையும் - தாம் இறந்து போகும் வரை
தீயனவே செய்திடினும் - தமக்குத் துன்பங்களையே செய்தாலும்
தாம் அவரை - தாங்கள் அத்தன்மை உடையவரை
ஆம்தனையும் - தம்மால் முடிந்த வரையிலும்
காப்பர் - பாதுகாப்பார்கள்

(க – ரை.) பெரியோர்கள், தமக்கு மற்றவர்கள் துன்பங்களையே செய்தாலும், தம்மால் முடிந்த வரையில் அவர்களுக்கு நன்மைகளைச் செய்து, அவர்களைப் பாதுகாப்பார்கள்.

## வினாவும்-விடையும்

**1. நல்லவர்க்கு உதவுவதன் பயன் என்ன?**

நல்லவர்களுக்கு உதவி செய்தால், அவர் எப்போது திருப்பிச் செய்வார் என்று எதிர்பார்க்கக்கூடாது. அவர் தக்க காலத்தில் சிறந்த உதவியைச் செய்வார்.

**2. கல்லாதவன் கற்ற கவி எதைப் போன்றது?**

கல்லாத ஒருவன் தானே கற்றுக் கவி கூறுவது, வான்கோழி, தன்னை மயிலாகப் பாவித்துக்கொண்டு ஆடுவதற்குச் சமமானதாகும்.

**3. நன்மை தரும் செயல்கள் எவை?**

நல்லவர்களைப் பார்ப்பதும், அவர் சொற்களைக் கேட்பதும், அவர் குணங்களைப் புகழ்ந்து பேசுவதும், அவருடன் நட்புக்கொண்டு இருப்பதும் நன்மை தரும் செயல்கள் ஆகும்.

**4. எல்லார்க்கும் மழை பெய்வது எப்படி?**

நெல் பயிருக்குப் பாய்ச்சிய தண்ணீர் புல்லுக்கும் பயன்படுவதுபோல, நல்லவர் ஒருவருக்காகப் பெய்யும் மழை எல்லார்க்கும் பயன்படும்.

**5. ஒருவரை எது கொண்டு மதித்தல் வேண்டும்?**

ஒருவரை உருவத்தைக்கொண்டு மதிக்காமல் அவர் குணங்களைக்கொண்டே மதிப்பிடவேண்டும்.

**6. மரத்திற்குச் சமமானவன் எவன்?**

கல்வி அறிவு இல்லாதவனும், பிறர் குறிப்பினை அறிய முடியாதவனும் மரத்திற்குச் சமமானவன் ஆவான்.

**7. எவரைக் கடக்கக் கருதுதல் ஆகாது?**

அடக்கமாக இருப்பவர்களை அறிவு இல்லாதவர்கள் என்று எண்ணி வெல்வதற்கு நினைக்கக்கூடாது.

**8. உறவினர் அல்லாதவர் எவர்?**

நீர் வற்றிய குளத்திலிருந்து பிரிந்துபோகின்ற கொக்கு முதலிய பறவைகளைப்போலத் துன்பம் வந்தபொழுது நீங்கிவிடுபவர் உறவினர் ஆகமாட்டார்.

1082—4 *

**9. உறவினர் எவர்?**

நீர் வற்றிய குளத்தில் கொட்டிப் பூண்டும், ஆம்பல் கொடியும், நெய்தல் கொடியும் நிலைத்திருப்பதுபோல, எப்போதும் பிரியாமல் இன்ப துன்பங்களைச் சேர்ந்து அனுபவிப்பவரே உறவினர் ஆவர்.

**10. 'உடன்பிறந்தே கொல்லும் வியாதி'—விளக்கு.**

உடன்பிறந்தவர் என்று எண்ணி, அவரையே நம்பி இருக்கக்கூடாது. ஏனெனில், நோயானது நம் உடலோடு தோன்றியே நம்மைக் கொல்கிறது. நம்முடன் பிறவாமல் எங்கோ மலையில் தோன்றும் மருந்து, நம் நோயைப் போக்கும். அதுபோல, நமக்கு ஏற்படும் துன்பத்தைப் போக்கும் அயலார்கள் உலகில் உண்டு.

**11. கயவர் நட்பு எத்தகையது?**

கல் பிளந்துவிட்டால் அது மறுபடியும் பொருந்தாது. அதுபோல் கயவர் பகைகொண்டு பிரிந்துவிட்டால் மறுபடியும் ஒன்றுசேர மாட்டார்.

**12. இடைப்பட்டவர் நட்பு எத்தகையது?**

பொன் பிளவுபட்டால் தீ அதனை ஒன்றுபடுத்தும். அதுபோல, ஒருவர் இடையில் நின்று சமாதானப்படுத்தினால் இடைப்பட்டவர் கூடிக்கொள்வர்.

**13. சான்றோர் நட்பு எத்தகையது?**

பெரியோர்கள் கோபங்கொண்டு பிரிந்தால், தண்ணீர் இரண்டாகப் பிரியும்படி விட்ட அம்பினால் ஏற்பட்ட வடுப்போல், அவர்கள் உடனே சேர்ந்து கொள்வார்கள்.

**14. அன்னம், காக்கை—இவற்றால் அறிவது என்ன?**

தாமரைக்குளத்தில் அன்னப்பறவை சேர்ந்திருப்பது போலக் கற்றறிந்த பெரியோரைக் கற்றவரே விரும்பிச் சேர்வர். பிணத்தை விரும்பும் காக்கையைப்போல, மூடரை மூடரே விரும்பிச் சேர்வர்.

**15. எவர் மறைந்து வாழ்வர்?**

மனத்தில் வஞ்சனை உடையவர்கள் மறைந்து வாழ்வார்கள். மனத்தில் வஞ்சனை இல்லாத பெரியோர்கள் வெளிப்படையாக வாழ்வார்கள்.

**16. கற்றவர் எப்படிச் சிறப்பு உடையவர்?**

அரசனுக்குத் தன் நாட்டில் மட்டும் புகழ் உண்டு. பிற நாடுகளில் பெருமை இல்லை. ஆனால், கற்றறிந்த

வருக்கோ அவர் சென்ற இடங்களில் எல்லாம் பெருமை உண்டாகும். ஆகையால், அரசனைவிடக் கற்றறிந்த பெரியோரே பெருமை உடையவர் ஆவர்.

**17. 'மேன்மக்கள் மேன்மக்களே'—எப்படி ?**

பாலை வற்றக் காய்ச்சினாலும், அது சுவையில் குறையாது. சங்கினை நெருப்பில் இட்டுச் சுட்டாலும் அது வெண்மை நிறத்தையே காட்டும். அதுபோல் மேன்மக்கள் வறுமை அடைந்தாலும் உயர்ந்த குணம் உடையவரே ஆவர். ஆனால் நெருங்கிப் பழகினாலும், நட்புக் குணம் இல்லாதவர் நண்பர் ஆகமாட்டார்.

**18. பெரியோர் தன்மை யாது ?**

மரமானது தன்னை வெட்டிச் சாய்க்கும் வரையில், வெட்டுபவர்க்குக் குளிர்ந்த நிழலைக் கொடுத்து வெயிலை மறைக்கும். அதுபோலப் பெரியோர், தாங்கள் இறக்கும் வரை, தமக்கு மற்றவர்கள் துன்பங்களையே செய்தாலும், தம்மால் முடிந்தவரை அவர்களுக்கு நன்மையே செய்து அவர்களைப் பாதுகாப்பார்கள்.

## மாதிரி வினாத்தாள்

### மூன்றும் வகுப்பு—தமிழ்

நேரம் $1\frac{1}{2}$ மணி] [மதிப்பெண் : 50

1. பின்வரும் வினாக்கள் எவையேனும் ஐந்துக்கு மட்டும் விடை எழுது : ($2 \times 5 = 10$)

(அ) ஆண்டவன் வடிவம் எது ?

(ஆ) நீ அறிந்த விடுகதைகள் இரண்டு எழுது.

(இ) நரி எதைக் கண்டது ? என்ன விரும்பியது ?

(ஈ) சரிநிறை என்பதை எப்படி அறிவது ?

(உ) தென்னை மரத்தின் பயன்களுள் மூன்றை எழுது.

(ஊ) 'நெற்பானையும் எலியும்' என்னும் பாடத்தால் நீ அறியும் நீதி யாது ?

(எ) நாம் ஏன் ஆடை உடுத்துகிறோம் ?

(ஏ) நீ அறிந்த பழமொழிகள் மூன்று எழுது.

(ஐ) வானம்பாடி வேறிடம் சென்றது ஏன் ?

2. பின்வரும் வினுக்களுள் எவையேனும் ஐந்துக்கு மட்டும் விடை எழுது : (2×5=10)

(அ) பூனைகள் குரங்கிடம் ஏமாந்ததற்குக் காரணம் என்ன ?

(ஆ) நாய் கவிஞருக்குச் செய்த உதவி யாது ?

(இ) கொக்கு என்ன சூழ்ச்சி செய்தது ?

(ஈ) குருடர்கள் யானையின் முழு வடிவத்தை ஏன் காணவில்லை ?

(உ) நாம் பயணம் செய்யும் ஊர்திகள் எவை ?

(ஊ) ஈக்களால் உண்டாகும் தீமை யாது ?

(எ) மாமல்லபுரம் என்னும் பெயர்க்குக் காரணம் என்ன?

(ஏ) கிழமுயல் ஏன் சிங்கத்தைக் கொல்ல நினைத்தது ?

(ஐ) தாமரை இலையில் ஏன் தண்ணீர் ஒட்டுவது இல்லை?

(ஒ) வானொலியைக் கண்டுபிடித்தவர் யார் ?

3.(அ) எவர் கடவுள் ?

(ஆ) செல்வர்க்கு அழகு எது ?

(இ) பெருமையும் சிறுமையும் எவ்வாறு உண்டாகும் ?

(ஈ) அறிவு இல்லாதவருக்கு எவை இல்லை ?

(உ) பிறர் கையில் கொடுக்கக் கூடாதவை எவை ?

(2×5=10)

4.(அ) நன்மை தரும் செயல்கள் எவை ? 2

(ஆ) உருவத்தால் ஒருவரை மதித்தல் கூடாது என்பது ஏன் ? 2

(இ) 'கற்பிளவோடு ஒப்பர்' எனத் தொடங்கும் பாட்டைப் புத்தகத்தில் உள்ளபடி எழுது. 4

5.(அ) ஓர் எழுத்துச் சொற்கள் நான்கு எழுது. 2

(ஆ) பெயர்ச் சொற்கள் இரண்டு, வினைச் சொற்கள் இரண்டு எழுது. 2

(இ) படித்தேன், நடந்தது, காய், இது—பன்மை எழுது. 2

(ஈ) காலம் எத்தனை ? அவை எவை ? 3

(உ) விரைந்து, சிறந்த, குறிப்பு—இந்தச் சொற்களை அமைத்து வாக்கியங்கள் எழுது. 3

50



